# ஆசிரியர் குழு

1. வித்துவான் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள்
   ஸ்ரீ காசிமடம் இளவரசு, திருப்பனந்தாள்.

2. திரு. கே. சிவராமன் அவர்கள் M. A.,
   சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர்,
   காசிச் சர்வகலாசாலை, காசி.

3. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A. B. O. L.,
   பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.

4. ராவ்சாஹிப், வித்துவான். திரு. கு. அருணாசலக் கவுண்டர்
   அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக்
   கல்லூரி, திருநெல்வேலி.

5. திரு. ஆ. சி. ஷண்முகநயினார் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
   வழக்கறிஞர், தென்காசி.

6. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., B. L
   (Verification Officer) இந்து அறநிலைய இலாகா,
   20, நுங்கம்பாக்கம் ஹைரோடு, சென்னை – 6.

7. திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள் M. A.
   தமிழ் விரிவுரையாளர், காசி இந்துப் பல்கலைக்கழகம், காசி.

T. M. குமாரகுருபரன் பிள்ளை B. A., B. L.,
நிர்வாக ஆசிரியர்.

## உள்ளுறை

## PRESS & REGISTRATION OF BOOKS ACT.

Registration of Newspapers (Central) Rules, 1956.
FORM IV (SEE RULE 8)
R. No. 1485/57.

**Statement about ownership & other particulars about " KUMARAGURUPARAN " -(Monthly)**

| | | |
|---|---|---|
| 1. | Place of Publication | ...Srivaikuntam |
| 2. | Periodicity of its publication | ...Monthly |
| 3. | Printer's Name | ...Kumaraguruparan Achakam |
| | Nationality | ... |
| | Address | ...Sakattukara Street<br>...Srivaikuntam |
| 4. | Publisher's Name | T. M. Kumaraguruparan Pillai B. A., B. L., |
| | Nationality | ...Indian |
| | Address | Permanent President, 'Srivaikuntam Sri Kumaraguruparan Sangam' |
| 5. | Editor's Name | T. M. Kumaraguruparan Pillai B. A., B. L., |
| | Nationality | ...Indian |
| | Address | ...Managing Editor<br>...Srivaikuntam |
| 6. | Names and addresses of individuals who own the newspapers and partners or shareholders holding more than one percent of the total capital | ...'Srivaikuntam SriKumaraguruparan Sangam'<br>...(Registered under ActXXI of 1860) |

I, T. M. Kumaraguruparan Pillai, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

T. M. Kumaraguruparan Pillai B. A., B. L.,
Signature of Publisher.

13—2—1963.

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை

# குமரகுருபரன்



| மலர் 14 | சுபகிருது-ஆ மாசித் திங்கள் 1-ம்வ [13–2–63] | இதழ் 2 |
|---|---|---|

## சிதம்பரச் செய்யுட் கோவை

முதுபெரும் புலவர்
ஸ்ரீமத் சிவஞானத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
திருவெண்காடு.

[கட்டுரை 65]

### 9. அளவைக்கு அரியவன்

'அளவை' என்பது பிரமாணம். 1. பிரமாணம், 2. பிரமேயம் 3. பிரமாதா, 4. பிரமிதி என்னும் நான்கனையும் உணர்வது இங்கு அதி முக்கியமாகும். இன்றேல் இதிற் கூறப்படும் இரண்டடிப் பொருளும் இனிது விளங்குதல் அரிது. உலகப் பொருள் எல்லாம் அசத்து, கடவுள் சத்து. கடவுளாகிய சத்தையும் உலகப் பொருள் ஆகிய அசத்தையும் அறியும் உரிமையுள்ளது உயிர். அது சதசத்து. சத்தாகிய கடவுளைச் சார்ந்து சத்தாயும் அசத்தாகிய உலகொடு சார்ந்து அசத்தாயும் இருக்கும் இயல்புடையது உயிர் ஆதலின், அதைச் 'சதசத்து' என்றனர்.

"சத்தசத் தறிவ தான்மாத் தான்சத்தும் அசத்தும் அன்று
நித்தனுய்ச் சதசத் தாகி நின்றிடும் இரண்டின் பாலும்".

என்னும் சிவஞான சித்தியார் திருவிருத்தம் இதனைத் தெளிவிக்கின்றது. பாசம் 1 அசித்தும் 2 அசத்தும் ஆகும். பதி 1 சித்தும் 2 சத்தும் ஆகும். பசு 1 சிதசித்தும் 2 சதசத்தும் ஆகும்.

| (1) | (2) | (3) |
|---|---|---|
| 1 சித்து | 1 அசித்து | 1 சிதசத்து |
| 2 சத்து | 2 அசத்து | 2 சதசத்து |
| 3 பதி | 3 பாசம் | 3 பசு |

"செறிசிவம்இரண்டும் இன்றிச் சித்தோடுசத்தாய்நிற்கும் (1)
"அறிபொருள் அசித்தசத்தாம்" (2)
"அசித்தாம் மனத்திலுல் தேர்வதெல்லாம்"
"நித்தனுய்ச் சதசத்தாகி நின்றிடும் இரண்டின் பாலும்" (3)
"சத்துளபோதே வேறே சதசத்தும் அசத்தும் எல்லாம்
"சித்தசித் தான்மா ஒன்றும் முப்பதும் அசித்தே செப்பில்"

என்னும் இவையும் அச்சித்தியாராகிய தமிழ்ச் சிவாகமத்தின் வசனங்களே.

பதி பாசத்தைச் சாராது. அசத்தாகிய பாசம் பதி எதிரில் நில்லாது. பதியையும் பாசத்தையும் அறியும் உரிமையுடையது சதசத்தாகிய பசு.

"சத்தசத்தைச் சாராது+அசத்து+அறியாது+அங்கண் இவை
உய்த்தசத சத்தாம் உயிர்" *(திருவருட்பயன். 17)*

இச் 1 சத்து, 2 அசத்து, 3 சதசத்து என்னும் 1 பதி, 2 பாசம், 3 பசு ஆகிய மூன்றனுள், சதசத்தாகிய பசுவினது சிற்சத்தியே பிரமாணம். அஃதாவது ஆன்ம சிற்சத்தியே பிரமாணம். (அளத்தற்கருவி). ஆன்மாவே பிரமாதா (அளப்பவன்). சிற்சத்தியின் (அறிவின்) நிகழ்ச்சியே பிரமதி (அளத்தல் ஆகிய தொழில்). சத்தாகிய பதியும் அசத்தாகிய பாசமும் ஆகிய இரண்டுமே பிரமேயம் (அளக்கப்படும் பொருள்). பதி பிரமேயமாம்போது ஆன்

மாவிற்கு ஆதாரம் ஆகி ஆன்மாவினுடனின்று (அந்நியம் இன்றி) விளங்கும் வியஞ்சகம் (உபகாரப் பொருள்) சிவஞானம்.

பாசம் பிரமேயம் ஆம்போது, பசுவிற்கு வேருய் நின்று விளக்கும் வியஞ்சகம் ஆவன காட்சி (ப்ரத்யக்ஷம்) கருதல் (அநுமாநம்) உரை (ஆகமம்) என்னும் அசத்தாகிய பாசஞானம் ஆகும். ஆதலின், அதுபற்றி அவையும் பிரமாணம் (அளவை) என்று உபசாரம் ஆகக் கூறப்படும்.

இவ்வாறு அன்றி வியஞ்சகங்களையே பிரமாணம் என்பர் தார்க்கிகர் முதலோர். அம்மதம் பொருந்தா மதமாதலைப் பௌட்கராகமம் முதலியவற்றுட் காண்க.

சாதாரணமாகப் பலரும் அத்தார்க்கிகர் மதம் பற்றிய பிரமாணங்களை ஆள்கின்றனர். அவற்றுள், காட்சி (ப்ரத்யக்ஷப் பிரமாணம்) பதியை அறிவதில் பசுக்கட்கு இல்லை. இந்திரியப் பிரத்தியக்கம் ஆகிய பொறிவாயிற் காட்சியாற் பசு, பதியை அறிய மாட்டாது.

“பொறிபுலன் கரணம் எல்லாம் புருடனுல் அறிந்தான் மாவை அறிதரா”. ஆன்மாவையே அறியமாட்டாத அப்பொறிகள் சிவனை அறிய வல்லன ஆதல் எங்ஙனம்? அப்பொறிகளை இயக்கும் ஆன்மாத்தான் சிவனை அறிய மாட்டுமோ? (பொறிகளாம்) “அவையே போல ஆன்மாக்கள் அனைத்தும் எங்கும்

செறிதரும் சிவன்றனுலே அறிந்திடும்; சிவனைக் காணு,
அறிதரும் சிவனே எல்லாம் அறிந்தறிவித் தும்நிற்பன்”.

பதிப்பொருளாகிய சிவபரஞ்சுடர் சிவஞானத்தால் அறியப்படும் பொருள். ஏனைய பாசப் பொருளெல்லாம் பாச ஞானம் ஆகிய அளவையறிவால் அறியப்படும் பொருளாகும். ஆதலால் தான் மெய்கண்ட தேவ நாயனர், “ஈண்டு அறிவினுல் அறியப்பட்ட சுட்டு அசத்து” என்றருளினர். அதன் உரையில் ஆசிரியர் சிவஞானமாமுனிவர், “சுட்டப்படும் பொருளைச் சுட்டு என்ருர்; ஆகுபெயரான். சிவஞானத்தான் அறியப்படும் பொருளின் நீக்குதற்கு அறிவினுல் என விசேடித்தார். ஈண்டு அறிவு என்றது

உலகத்துள்ளார் அறியும் அளவையறிவினே; சுட்டு என்றதனுல், சுட்டியறிவது அதுவே ஆகலின், இஃது உணர்ந்து கோடற் கன்றே 'அறிவினுல் அறிந்த யாவும் அசத்தாதல் அறிதி' என்ற புடைநூலாசிரியர் "தொன்மையறிவுதான் ஒன்றை முந்தியது வதுவாகக் காணும் அறிவுகாண் அசத்து" எனமிளத் தெரித் துணர்த்தியதூஉம் என்க" என்று எழுதியருளினுர். இங்கு உணர்ந்து கோடற்கு அன்றே என்று மடவனும் பிரித்துணர் வான். மகா வித்துவான்கள் கன்றே என்று பிரித்துப் பொரு ளுங் கூறுவார்கள்.

பேரூர் வேலப்பதேசிக சுவாமிகள் அருளிச் செய்த 'பஞ்சாக் கரப்பஃறெடை' என்பது சைவ சித்தாந்த ஞானச் செல்வரெல் லாரும் சிந்தையிலும் சிரத்திலும் வைத்து வழிபடத்தக்க அள வில்லாத மாண்புடைய அருள்நூல். உருவிற் சிறு நூல் ஆயினும் அருளிற்பெரு நூல். அதன் இடையே,

> " இருள்விளக்கா தித்தன் எழிற்கிரணத் துள்ளே
> மருள்விளக்கா வாறகன்று மாளத்—தெருள்விழிபோல்
> ஆமாம் நமக்கள் "

எனவரும் பகுதிக்கு உரையெழுதிய ஒரு மகா வித்துவான் அகன்று என்று பிரித்துப் பொருள் உரைக்கும் அறிவின்றி, 'கன்று' என்று பிரித்துரைத்தது மாபாதகம் ஆகும். விளக்கா வாறு அகன்று எனப் பிரிக்கத் தெரியாததே மகா வித்துவான் என்னும் மாட்சிக்குரிய கல்வித் தகுதி. சிவனருட்பனுவலில் இக் குற்றம் சார்த்தல் தீவினைப்பாலதன்ருே? இங்கும் பால + தன்ருே எனப் பிரித்தும் பொருள் கூறவல்லார் அவர். மருள்விளக்கா வாற்கு அன்று மாள என்று பிரிக்காதது ஏனே? தவற்றுப்புள்ளி அத்தவற்றையும் தோற்றியிருக்கலாம்.

இருள் மகாரம். விளக்கு நகாரம். சிவம் சூரியம். சத்தி சூரியகிரணம். நகாரம் வகாரத்தால் மாளும். மகாரம் சிகாரத் தால் மாளும். அகன்று மாளல் தன் சத்தி மடங்குதலே. விளக்கு இரவியின் கிரணத்தில் விளக்குந் தொழில் அகன்று மாளும். அதுபோல நகாரம் வகாரத்தில் திரோதானம் நீங்கி அநுக்கிரக

மாக அடங்கும். இருள் இரவிமுன் மாளுமாறு, மகாரம் சிகாரத்தின் முன் நில்லாது அகன்றொழியும். கண் இருளையும் விளக்கினையும் வேண்டாது நீங்கிக் கதிரவனையும் கதிரையும் பற்றுமாறு நின்று கதிராற் கதிரவனைப் பெற்று வாழ்தல்போல, உயிர், நம இரண்டும் முறையே வகாரம் சிகாரம் இரண்டாலும் மாறச் சிவய மூன்றும் நின்ற நிலை சுத்தத்திற் சாக்கிரம். அதைச் சொல்லும் பகுதி அது. அதனால், அப்பகுதிக்கு அடுத்த கண்ணி, "தெருள் விழிபோல் ஆமாம் நமக்கள் அருள் சிவத்தான் மாறஉயிர் தாமாம் முறை மூன்றும் சாக்கிரமாம்" என்றருள்கின்றது, அத்திருவைந்தெழுத்து நூல். நாம் எங்கே அவ்வருள் நூல் எங்கே? நம் அறிவு எங்கே! அதன் பொருள் எங்கே? நம் சிற்றறிவை அங்கே செலுத்தி மீளாநரகிற்கு ஆளாதல் நன்றாமோ? பாதகத்தில் அந் "நன்று பெரிதாகும்".

அப் பஞ்சாக்கரத்தை உபாயம் ஆகக் கொண்டு அறியப்படும் பரமசிவத்தை ஆகமப்பிரமாணத்தாலும் அநுமானப்பிரமாணத்தாலும் அறிதல் கூடும் அன்றோ? பிரத்தியட்சப்ரமாணத்தால் தான் அறிய முடியாது எனலாம். பிரமாணம் எதனாலும் பரமசிவத்தின் சிறப்பியல்பை உணர்தல் இல்லை. "ஆகமவளவை சார்பாகத் தலை நின்று வ்ழியளவையான் ஆராய்ந்து துணியப்படுவது பரசிவத்தினது பொதுவியல்பே யாகும். சிறப்பியல்போ திருவருள் கண்ணாக அநுபூதியிற் கண்டுணரத் தக்கதாகும். வழியளவை என்றது அநுமான அளவையை. ஆகமவளவை உரையளவையாகும். இவ்விரண்டளவையும், ஆசிரியர் குமரகுருபர முனிவரர் திருவாக்கில் வந்தவாறு இது:—

"உளவயின் உளவள வுணர்வதை யலதுரை
அளவையின் அளவிடும் அளவினை அலை."

இதன் விளக்கம் இனி எழுதப்படுவதாயினும், முன் எழுதிய எல்லாம் இதைக் கற்போர்க்கு 'அளவை' ஞானம் ஓரளவு தோன்றல் வேண்டும் என்னும் ஆர்வம்பற்றியவை. இத்தகைய இடங்களில் தவறான பொருளை நினைத்தலும் குற்றம், எழுதுவது என்ன கதியாக்கும்? அவ்வதோகதியை அஞ்சி நின்றே அருளாளர் திருப்பாடலுக்கு உரை கூறல் நியாயம் ஆகும்.

உளம் + வயின் = உளவயின். மனத்தில், உளவயின் உள்ள அளவு–உளவயினுளவளவு. அஃது அந்தக் கரணத்துள் ஒன்ருய மனத்தால் உய்த்துணரும் அளவு. அதுதான் அநுமாநப் பிரமாணம் (வழியளவை; கருதலளவை;) முதலிற் கூறியவாறு அளவை மூன்றும் ஆன்மசிற்சத்திக்கு அபிவியஞ்சகம் ஆகும். அவை உபகாரலட்சணையாகப் பிரமாணம் (அளவை) எனக் கொள்ளப்பட்டன. கண்ணுலே காண்கிறேன் என்பது விளக்காலே காண்கிறேன் என்பது போன்றதுதான். உண்மையிற்காண்பது ஆன்ம சிற்சத்தி. அதற்குக் கண்ணும் விளக்கும் உபகாரம். கண் ஒளியை அறியும். ஒலியை அறியாது. காது ஒலியை அறியும், ஒளியை அறியாது. இவ்வாறே எல்லாப் பொறியும் ஒன்று அறிந்ததை ஒன்று அறியாது. எல்லாவற்றையும் அறிவது ஆன்ம சிற்சத்தியே. புத்தி பிரகிருதி ஐந்யம். கண் முதலியவற்றிற்கும் புத்திக்கும் வேறு பாடில்லை. புத்தி சுகதுக்கருபை. சிற்சத்திக்குப் பிரமேயம். சடம். சித்ருபப்பிரமாணமாகாது. ஆன்ம சிற்சக்திக்குக் காட்சியளவை முதலியவற்றில் அவ்யாப்திக் குற்றம் இல்லை. பல்வகைப் பிரமேயங்களில் அதிவியாப்திக் குற்றமும் இல்லை. சிற்சக்தி நித்யவியாபக சித்ருப மாதலால் அசம்பவம் என்னும் குற்றமும் இல்லை. இம் முக்குற்றமும் நீங்கிய ஆன்ம சிற்சத்தியே பதியை அறிதற்கு உரிய அளவை. உளவயின் - உள்ளம் (-மநம்) என்றதன்கண், அநுமான அளவை உயிர் எனப் பொருள் கொண்டால் உளஅளவு–சிற்சத்திப்பிரமாணம். முன் அநுமான அளவை என்றதும் இச்சிற்சத்திப்பிரமாணமும் ஆகிய இரண்டும் அன்றி முன்ருவதாகவும், முடிவானதாகவும் உள்ள பிரமாணம் உண்டு. அதுவே சிவஞானம். அதைக் குறிக்குங்கால் உளவையின்–உயிரின்கண், உள–உள்ள. அளவு - பிரமாணம் எனப் பொருள் கொள்ளல் வேண்டும். உள்ளுந் தொழில் உயிர்க்கே உரியது. உள்ளுதற்குரிய இடம் மனம். அதனுல் உள்ளம் என்பது உயிர்க்கே உரியது. மனத்திற்கு உரிய பெயரன்று. சிவஞானபோதம் முதலியவற்றை உணர்ந்தோர்க்கு இவ்வுண்மை தெரியும்.

'உள்ளம் உருகில் உடனுவர்' (திருவுந்தியார்), "ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணரும்" என்னும் பொருட்டாய் நின்ற; "ஐம்

பொறியை ஆண்டு அங்கு அரசாய் உளம் நிற்ப ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம்'' "சொன்ன சிவன் கண்ணு உளம் விளையாற் கண்டறிந்து நிற்கும்" கண்டறியும் உள்ளம் வேறுண்டு'' (சிவஞான போத வெண்பா,) 'அரனை உளத்திற் கண்டு அடிகூடிற் பாசம் கூடாது. (சித்தியார்).

சிவஞான சித்தியாரில் அளவையின் முதல் திருவிருத்தத்தின் உரையில் சிவாக்கிர யோகிகள் எழுதிய இப்பகுதி இங்கு அறியத்தக்கது.

ஆன்மசிற்சத்தியானது வித்தியா அராகம் முதலியன கூடிக் கலங்கியதாய் விஷயாபிமுகியான பொழுது கலங்கிய சிற்சத்தியாம் பிரமாணம். புத்தியின் விருத்தியோடு கூடி விஷயத்தைப் பகுத்தறிகின்றபோது பிரமையாம். இவ்வுபாதிகளால் கலக்கமற்ற சைதன்யம் பிரமாதா. இவ்வுபாதி விருத்தி இன்றிச் சிற்சத்தி (விஷயாபிமுகி ஆகாது) சிவோன் முகியான பொழுது சிவஞான அபிவியத்தியினுல், சூரிய கிரணத்தால் சூரியனையும் எல்லாப் பொருள்களையும் கண்டது போலச் (1) சிவனையும் (2) அச்சிவஞானத்தையும் (3) தன்னையும், தானே காணும் பொழுது அது பிரமையாய் அப்பிரமையை அறிவிக்கின்ற சிவஞானம் பிரமாணமும், சிவஞான அநுசந்தானம் பிரமிதியும், ஆன்மா பிரமாதாவுமேயாம்.

இதனுல், ஆன்ம சிற்சத்தி கலக்குற்றதாய் விஷயாபி முகியான பொழுது அவ்வம்சம் பிரமாணமே ஒழியப் பிரமாதா ஆகாது என்றும், கலக்கமற்றதாய்ப் பரோன் முகியான பொழுது பிரமாதா ஒழியப் பிரமாணம் ஆகாது என்றும் கூறப்பட்டது.

நித்திய வியாபக சித்ருபன் ஆன்மா ஆனுலும் சிவஞானத்தாலே மலதோஷம் நீங்கியும் சிவஞானம் அறிவித்தால் அல்லது தன்னையும் சிவனையும் பாசத்தையும் அறியமாட்டாதபடியால் அசம்பவதோஷம் உண்டு. ஆகையால், சிவசத்தியே பெத்தம் முத்தி இரண்டிலும் பிரமாணம் என அறிக.

சிவஞானம் பெத்தத்திலே விடயத்தைக் கூட்டியும் முத்தியிலே அதை நீக்கி ஞானமாய் நின்று ஞேயத்தைக் காட்டியும் நிற்கும். ஞேயம்- காணப்படும் பொருள். இங்குச் சிவம், உளவயின் உளவளவு—

| | | |
|---|---|---|
| 1. | மனம் | (1) அநுமானப்பிரமாணத்தால் |
| 2. | உயிர் | (2) ஆன்மசிற்சத்திப்பிரமாணத்தால் |
| 3. | சிவசக்தி | (3) சிவசிற்சத்திப்பிரமாணத்தால் |

என்று மூன்று பொருளும் பயப்பதாகும். ஆகவே அவ்வளவை யால், பதியை உணர்தல் கூடும். உரையளவையால் கடவுள் உண்டு என்று அங்கிகரிக்கலாமே அன்றிக் கடவுளை(அறிவால்) அறிதற்கு இயலாது. கடவுளை அறிதற்கு உரையளவை சாதனம் அன்று. உண்டு என்பதை அறிவிப்பது ஆகம அளவை. அவ் வுண்மையைச் சோதித்தறியச் சாதனம் ஆவது அநுமான அளவை. அதனினும் சிறந்தது ஆன்மசிற்சத்தியால் நேரே அறிவது. அதற்குச் சாதனம் சிவஞானம், அச்சிவ ஞானத் தால் நேரே அறிவது முடிவானது. அதனினும் சிறந்தது வேறு இல்லை. இங்குச் சிந்தித்து உணர்தற்பாலது இது:- ஐந்தெழுத்து, ஆன்மா, சத்தி ஆகிய "அம்மூன்றும் முதல்வனுக்கு முறையே தூலவடிவும் சூக்குமவடிவும், அதிசூக்கும வடிவும் எனக் கொள்ளப் படும். 'ஐந்தெழுத்தால் அமைந்தவுரு' எனக்கூறி, அதன்பின் ஆன்மாவில் அர்ச்சித்து எனவும் கூறி ஈண்டுச் சத்திமூர்த்தி என்றல் மலைவாம் போலும் எனின் மலைவு ஆகாது. (சித்தி யாருரை). அருள் அருளே கண்ணாகக் காண்டல், அவனருளாலே அவன் றாள் வணங்கல், அருள்நிதிதரவரும் ஆநந்தமலை, காண்பாரார் கண்ணுத லாய் காட்டாக் காலே, என்னும் திருமுறைப் பொருளுண்மைகளை இங்கு மூன்றுவது பொருட் கருத்துக் குரியனவாகக் கருதுக. பரமசிவனை உளவயின் உளவாவால் உணர்வதைவிட்டு, உரை யளவையால் அளவிட்டுணர முயன்றால், அவ்வளவையால் அளவிட்டறியப் படுபவனல்லன்.

> "உளவயின் உளவள வுணர்வதை அலதுரை
> அளவையின் அளவிடும் அளவினை அலை."

என்பது நடராசப்பிரானை முன்னிலையாக்கிக் கூறியது. 'அள வினை அலை' என்றது முன்னிலை வினை. அளவினை–அளக்கப்படு தலையுடையாய். அலை–அல்லை.

உளவயின் உளவளவுணர்வது எப்படி? அதிற்குரிய மூன்று பொருளில் முதற்பொருளுக்குக் காட்டும் அநுமான அளவைக்கு

எடுத்துக் காட்டு இது. இதில் ஏனை இரண்டு பொருளும் அடங்கியுள்ளன. நுண்ணுணர்வினர்க்கே இது விளங்கும். அறிவது ஆன்மசிற்சத்தி. அறிவிப்பது சிவசிற்சத்தி. மூன்றும் இவ்வநுமான அளவையில் உள்ளன.

1. பிரதிஞ்ஞை:— 'தருபவன் ஒருவன் வேண்டும்;'
2. ஹேது:— 'வருமுறை வந்து நின்று போவதும் ஆதலாலே;'
3. திருஷ்டாந்தம்:— 'மண்ணினிற் கடாதியெல்லாம் வருவது குலாலனாலே;'
4. உபநயம்:— 'எண்ணிய உருவம் எல்லாம் இயற்றுவன்;'
5. நிகமநம்:— 'கண்ணுகாரியங்கள் எல்லாம் காரண மதனிற் காண்பன்'.

'ஒருவனோடொருத்தி ஒன்று என்று உரைத்திடும் உலகம் எல்லாம்' என்றது கார்யத்வ சாதனை.

'ஈசன்தானும்' என்றது பட்சதர்மத்தின் பலத்தினால் மகேசுவரன் ஏகனே ஜகத்கர்த்தா என்றதாம். இவ்வநுமானம் பதியுண்மையை மட்டும் அறிதற்குச் சாதனமாயிற்று. பதிசா க்ஷாத்காரத்திற்கு அநுமானம் முதலிய அளவை ஒன்றும் சாதனம் ஆகமாட்டாது. அகண்டாகார சச்சிதாநந்த சொருப சாக்ஷாத்காரம் சிவஞானத்தால் அன்றி வேறு எதனாலும் எய்தாது, எய்தாது, எய்தாது.

1) "ஒவிட விந்து ஞானம் உதிப்ப தோர் ஞானம் உண்டேல்
சேவுயர் கொடியி னன்றன் சேவடி சேரலாமே,"

2) "ஆரியனும் ஆசான் விந்து அருளால் தோன்றும்
அடிஞானம் ஆன்மாவில் தோன்றும் தோன்றத்
தூரியனும் சிவன் தோன்றும் தானும் தோன்றும்,"

3) குருவால் ஞானநிட்டை அடைந்து நாதன்றுளடைவர்,

4) வீடுஎய்த அறிந்தோர் எல்லாம், மேலான ஞானத்தால் அரனை அருச்சிப்பர்.

5) நண்ணிய ஞானத்தினால்..........இகலோகத்தே முத்திபெறும் பதிஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாதநீழற் கீழ்நில்,

6) "யான்செய்தேன் பிறர்செய்தார் என்னது யான் என்னும் இக் கோணை, ஞானவெரியால் வெதுப்பி நிமிர்த்துத் தான்செவ்வே நின்றிட அத்தத்துவன்றான் நேரே தனைஅளித்து முன்நிற்கும் வினைஒளித்திட் டோடும்."

இது சாக்ஷாத்காரநிலை.

7) "என்னிச்சை உன்றனோ டுறும்இச்சை, உன்னிச்சையே மலத்தின் றன்னிச்சை. உன்னிச்சை என்னிச்சையாகத் தருவ துண்டேல் அன்னிச்சை நீஅற் றருளிச்சை ஆக அடையும் அந்த மன்னிச்சையே நிட்டை என்றான் சிவாயநம் மன்னவனே."

(நிட்டைவிளக்கம்)

(தொடரும்)

# THE DOCTRINE OF CREATION IN SAIVA SIDDHANTA

**Mr. P. Mutharasu,** M. A., B. T.

(Continued From Page 75. Vol. XIV)

Thus we have seen that the universe is real, composite, divisible and definite and it undergoes the three processes in an orderly manner. As it is unintelligent and physical it cannot cause its own changes. The earth cannot change itself into a pot. There is the absolute necessity of an intelligent potter to cause the change. This leads us naturally to the inevitable conclusion that the unintelligent universe undergoing several processes should be moved by a Supreme Intelligence. That Supreme Intelligence is the Omnipotent Destroyer. As it is He Who has withdrawn the entire universe into its primal cause, He only will be able to cause its evolution and preservation. The usual saying that the Trinity are in charge of the three activities, means that they do their respective functions under the explicit command and energising power of the Supreme Destroyer Who is One and One only. He is Siva, the All-Merciful.

We have thus found that the universe, when it goes out of existence, is resolved into the form of its cause. The Siddhantin terms this as Maya. It is a Tamil word signifying to the fullest extent the fundamental substratum of matter. The sound 'Mai' (மாய்) means involution (destruction) and 'A' (ஆ) means evolution (reproduction). It should not be construed as the Maya of the Vedantin, signifying Illusion, as the

Siddhantin holds and establishes that Maya is real. Hence Maya is the primal, eternal and all pervading real substance which serves as the first cause of the universe and God is the Efficient Cause. It may be asked that the soul is also an intelligent being and why it cannot cause the production of the universe. No. The soul's intelligence can act only when the soul is supplied with physical and psychical apparatus from Maya. The affective (இச்சை), cognitive (ஞானம்) and conative (கிரியை) aspects of the soul lie dormant, until it is provided with a body (either Mayic or Divine: Mayic body—during the evolutionary stage and Divine body— during Blissful stage) and it is energised by the Almighty God. So the soul is only a beneficiary and not the Benefactor. As such it is not competent for the work. Maya also cannot be the ultimate cause, it being the basic cause of the inert universe and it being not self-conscious. Hence by elimination of the soul (Pasu) and Maya (Pasa), we find that Pathi (God) is the Creator of the universe.

It will be, therefore, clear that just as the pot is an effect produced form clay by the potter, the universe constituted of the elements is an effect produced from the cause Maya, by God. As it is, three causes are required for the production of an effect—pot; i.e. the first cause (clay), the auxiliary cause (wheel, etc.) and the efficient cause, (the potter). Similarly for the creation of the universe, there must be three causes. They are Maya, the Energising Power or Sakti of God and God Himself. If it is so, where will God stand and work to create the world? This question may appear to be difficult; but it is a genuine one and the Siddhantin gives a suitable answer. Even

though there are clay, wheel and the potter, there will be no pot unless there is activity on the part of the potter. In the same way the universe comes into existence, remains and goes out of existence in the presence of God and because of the activity of His Energising Power. The Siddhantin shows the follwing analogy to explain the position. Just as one lotus buds, another blossoms and the third withers in the presence of the sun, the universe also undergoes the three processes in His presence. Hence God remains unruffled, because He is related to the universe only by His presence and His resolve which brings about the changes.

Now arises the question, why does God create this universe? What is the purpose or object of this creation? As some one says, is it His sport or lila? Are the souls created beings? The Siddhantin's replies to all these questions are direct, definite and based on observation and quite logical. First of all, the Siddhantin dismisses the question that the soul is a created being; for the creation of such a miserable being engulfed in the ocean of births and deaths will be of no credit to God, the All-Wise. That it is His sport is also far from satisfactory, unless it denotes the ease with which the activities of destruction etc., are performed by Him in an effortless manner. Moreover, He cannot sport Himself in the inexplicable miseries of the poor souls. Further, all other schools have not explained the problem of evil satisfactorily and the responsibility for good and bad deeds has not been fixed on solid ground.

We see various inexplicable differences in this world. One man is happy and the other is unhappy;

one is rich and another is poor. Then there is cruelty also, for here, the very condition of life is death. One animal tears another to pieces and every man tries to get the better of his own brother. This competition, cruelty, horror and sighs are rending our hearts day and night. God, the Merciful, cannot be responsible for all these. Then, who else is responsible? Swami Vivekananda says firmly, "We, we and none else, are responsible for what we suffer". The Tamil saying "தீதும் நன்றும் பிறர்தர வாரா" (Good and bad do not come to us because of other) also establishes this fact. As we sow, so shall we reap. Hence we have to conclude that we are happy or unhappy according to our past good or evil deeds. According to the Siddhantin, the soul cannot break off the shackles of Karma so long as it does its deeds with the sense of ego. It lands the the soul in further accumulation of Karma which plunges the soul in the ocean of births and deaths.

Now, what is all the misery and suffering due to? We see it as a matter of fact that we are subject to a great many privations and hardships. Why should the intelligent souls be constantly whirling round and round in the ocean of births and deaths? Is not the intelligent soul pure and fit to enjoy the everlasting Bliss of God? Because God exists eternally, His Bliss also is there, everlasting. Then, what is it that obstructs the soul from enjoying it? We know very well that there can be no effect without a cause. "So, there must be some cause, some defect, some imperfection, some pollution, some evil, some impurity or some such thing which stands at the root of all these troubles. This something is that which is known to

the Siddhantin as Anava Malam." This is otherwise called Darkness or Ignorance. This Anavam is not a a mere illusion, but a real fact, really existing and is taken as such by the Siddhantin.

Although this Anavam is single in itself, its powers are varied. It obstructs all the souls as a single sheet of darkness obstructs many a person's eyes. It can be asked whether Anavam is so powerful as to obstruct the Self-luminous Omnipotent God. It is not so. God is Self-effulgent and His Power is not and cannot be obstructed. But it is the power of intelligence of the individual souls that is obstructed. As a man defective in eyesight is disabled to enjoy sunlight and thereby the beauties of Nature, so also the defective soul is not able to enjoy the ever-existing Bliss of God. It is the defect of the souls themselves, but not of God. These souls whose intelligence is thus obstructed are called souls under bondage. It is for the liberation of these souls, God creates this universe.

(To be concluded in the next issue)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 14, இதழ் 1-ன் தொடர்ச்சி]

## II

## THIRUNAVUKKARASU SWAMI

(More commonly referred to as APPARSWAMI)

27 வடிவேறுதிரிசூலந்தோன்றுந்தோன்றும்
வளர்சடைமேலிளமதியந்தோன்றுந்தோன்றுங்
கடியேறுகமழ்கொன்றைக்கண்ணிதோன்றுங்
காதில்வெண்குழைதோடுகலந்துதோன்றும்
இடியேறுகளிற்றுரிவைப்போர்வைதோன்றும்
எழிறிகழுந்திருமுடியுமிலங்கித்தோன்றும்
பொடியேறுதிருமேனிபொலிந்துதோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே.

Here is the divine vision as the enraptured Saivite sees it.

27. See, there His bright trident appears to me;
See, there is the moon in His tangled hair;
His garland of flowers from the kondai tree,
And the ear-ring white in His either ear,
The cloak that He tore from the elephant wild,
His glittering crown and His body's sheen
Ash-smeared, He is ever the undefiled,
In Puvanam circled by groves all green.

---

# திருவுந்தியார்-விளக்கவுரை

பண்டித வித்துவான், சைவப்புலவர், சித்தாந்த நன்மணி,
திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

[மலர் 14, இதழ் 1-ன் தொடர்ச்சி]

பேரின்ப மான பிரமக் கிழத்தியோடு
ஓரின்பத் துள்ளான்என்(று) உந்தீபற
உன்னையே ஆண்ட(து)என்(று) உந்தீபற 34

(வி–ரை) பேரின்பமான பெருந்தலைவியோடு கூடியிருக்கின்றவனும், ஒப்பற்ற இன்ப வடிவினனாக இருக்கின்றவனுமான இறைவனே ஞானியர்களை ஆட்கொண்டு அருள் செய்கின்றான் என்பதாம்.

பிரமக்கிழத்தி - இறைவி. ஓரின்பத்துள்ளான் - இறைவன். இறைவன் இன்பமே வடிவாக விளங்குபவன். 'அவர்க்கு உருவம் இன்பகனம்' என்னும் திருவருட்பயனும், 'ஈறிலாப்பதங்கள் யாவையும் கடந்த இன்பமே' என்னும் திருவாசகமும் காண்க. 'சத்தி பின்னம் இலான் எங்கள் பிரான்' என்றும், 'அம்மையோடு அப்பனாகிச் செறிவு ஒழியாது நின்ற சிவன்' என்றும் பிற ஆசிரியர்கள் கூறுவது போலவே இவ்வாசிரியரும் 'பிரமக் கிழத்தியோடு ஓரின்பத்து உள்ளான்' என்றார். இக்கருத்தினையே,

"பேரின்ப மான பிரமக் கிழத்தியுடன்
ஓரின்பத் துள்ளானை உள்ளபடி — பேரின்பம்
கண்டவரே கண்டார் கடலுயிர்த்த இன்னமுதம்
உண்டவரே உண்டார் சுவை."

என்னும் திருக்களிற்றுப் படியாரும் நன்கு விளக்கும்.

பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக்
கண்டாரே கண்டார்என்(று) உந்தீபற
காணுதார் காணுர்என்(று) உந்தீபற. 35

(வி-ரை) பேய் பிடிக்கப்பட்ட பெண்டிர்போல உயிரையும், அப்பேயைப் போல இறைவனையும் காண வல்லார்க்கே அம்மையப்பரின் அருள் அநுபவம் கிட்டும். அல்லாதார்க்கு அவ்வநுபவம் கைகூடாது என்பதாம்.

பேய் பிடிக்கப்பட்டாள் தன்னுடைய மனம், மொழி, மெய் ஆகிய மூன்றும் தன்வசமின்றி பேயின் வசமேயாய் நிற்பள். அதுபோல உயிரும் இறையுணர்வு தோயப்பெற்று, தன்வயமன்றி அவ்விறைவன் மயமேயாய் நிற்க வேண்டும் என்பதாம். இங்ஙனம் தன்னை மறந்து தன்னுமம் கெட்டுத் தலைவன்தாள் தலைப்பட்டவர்களே ஞானியர்களாவர்.

நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடில்
நாலாம் நிலையாம்என்(று) உந்தீபற
நாதற்(கு) இடம்அ(து) என்(று) உந்தீபற. 36

(வி-ரை) பிராணவாயுவும், நாதகலையும் கூடிச் சுழுமுனை வழியே உச்சியிற் சென்று அருள்வழியிலே நிலையுறுவோரே நாலாம் நிலையாகிய சாயுச்சிய நிலையினை எய்துவர். அதுவே இறைவன் எழுந்தருளி யிருக்கத்தக்க இடமாகும் என்பதாம்.

நிலம், நீர், தீ, வளி, வெளி என்னும் ஐம்பெரும் பூதங்களுள் நான்காவதாக இருப்பது வளியாம். அது ஈண்டு பிராணவாயு எனப்பட்டது. உயிர்கள் இறைவன் மாட்டுப் பெறும் பேறுகள் நான்கு! அவை-சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்பன.

சாலோகமாவது:— புவனபதிகளின் உலகங்களை அடைந்து ஒருவர் மனையில் பணி செய்யும் அகத் தொண்டர்க்கு உள்ள உரிமை போல அவ்வுலகத்துள் எவ்விடத்தும் தடையின்றிச் சஞ்சரித்து அங்குள்ள போகங்களை அநுபவித்து வாழ்தல்.

சாமீபமாவது :— புத்திரர்க்குளதாகிய உரிமை போல அப் புவனபதிகளுக்கு நெருங்கின வராயிருந்து அவர் போகங்களை அநுபவித்து வாழ்தல்.

சாருபமாவது :— தோழற்குரிய உரிமைபோல அப்புவன பதிகளோடு ஒத்த வடிவமும் ஒத்த ஆபரணமும் ஒத்த போக அநுபவமும் பெற்று வாழ்தல்.

சாயுச்சியமாவது :— சரியையில் ஞான முதல் யோகத்தில் ஞானம் ஈருகிய ஞானங்கட்குப் பயனாகிய சாயுச்சியமும், ஞானத்தில் ஞானத்திற்குப் பயனாகிய சாயுச்சியமும் என இரு திறப்படும். அவற்றுள் சரியை முதல் யோகம் ஈருகிய மூன்றி லுமுள்ள ஞானத்திற்குப் பயனாகிய சாயுச்சியமாவது புவனபதி களால் அதிட்டிக்கப்பட்டு அப்புவனபதிகள் செய்யும் அதி காரங்களை அவர் போலவே செய்து கொண்டு வாழ்தல். முடி பாகிய ஞானத்திற்குப் பயன் எனப்படும் சாயுச்சியமாவது சிவபெருமான் திருவடியில் இரண்டறக் கலந்து சிவானந்தத்தை அநுபவித்தல்.

இந்நான்கின் விளக்கம் திரு. பொ. முத்தையா பிள்ளை அவர்கள் உரையிற் கண்டது. ஈண்டுக் குறிக்கப்பட்ட சாயுச் சியமாவது சிவபெருமான் திருவடியில் இரண்டறக் கலந்து சிவானந்தத்தை அநுபவித்தலாகும். இதுவே வீடுபேறு எனப் படும்.

சென்ற நெறியெல்லாம் செந்நெறி யாம்படி
நின்ற பரிசுஅறிந்(து) உந்தீபற
நீசெயல் செய்யாதே உந்தீபற. 47

(வி—ரை) செல்லும் வழியனைத்தும் சேம நெறியாகுமாறு இறைவன் நிற்கும் நிலையை அறிந்து, எல்லாச் செயல்களையும் தன் செயல் என்று கருதாமல் அவ்விறைவன் செயலென்றே கருதி வாழ வேண்டும் என்பதாம்.

உயிர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் கருவி கரணங் கள் இறைவனது அருள்வழி நின்று இயங்குவன. அவை

யெல்லாம் அவனது உடைமையாகும். உயிர்கள் அவனது அடிமையாகும். இவ்வுணர்வுவழி நின்று 'பொல்லாத தீவினையிற் போகார்கள் போனாலும், எல்லாம் சிவன் செயலே என்றிருப்பர்' என்னுமாப் போல எல்லாம் சிவன் செயலே என்று உணர்ந்து அவ்வருள்வழி நடத்தல் வேண்டும் என்பது இதன் கருத்தாம்.

'ஏதேது செய்திடினும் ஏதேது பேசிடினும்
ஏதேது சிந்தித்(து) இருந்திடினும் — மாதேவன்
காட்டிடுவ தானஅருட் கண்ணைவிட்டு நீங்காது
நாட்டம் அதுவாய் நட'.

'ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித்(து) இருந்தாலும்—மாதேவா
நின்செயலே என்று நினதுஅருளா லேஉணரில்
என்செயலே காண்கிலே னே.'

என்னும் சிவபோகசாரப் பாடல்கள் ஈண்டு நினைவு கூர்தற் குரியன.

போற்கோழுக் கோண்டு வரகுக்(கு) உழுவதுஎன்?
அக்கோழு நீயறிந்(து) உந்தீபற
அறிந்(து) அறியா வண்ணம் உந்தீபற. 38

(வி-ரை) பொன்னினாலாய கொழுவினைக் கொண்டு வரகுக்கு உழுவதால் என்ன பயனுளது? ஒன்றுமில்லை. அது போல குருவருளால் பெற்ற திருவருள் தன்மையை நன்கறிந்து அத்திருவருள் இன்பத்திலேயே திளைத்து இன்புறுவதல்லது உலகியல் சூழலில் உழன்று வருந்துதல் கூடாது என்பதாம்.

அதுஇது என்று அலைத்தறி வாகும்
அதுஇது என்றறந்(து) உந்தீபற
அவிழ்ந்த சடையார் என்(று) உந்தீபற. 39

(வி-ரை) பொருள்களை அது என்றும் இது என்றும் சுட்டி யறியாது, எல்லாவற்றையும் ஒருங்கறியவல்ல பெருமானாகிய இறைவனே, தனது கருணையினால் உயிர்களோடு ஒன்றி அவ்

வுயிர்களுக்கு உடனுய் நின்று உதவுகின்ருன். அத்தகைய பெருமான் விரிந்த சடையினையுடைய சிவபெருமானே யாவன் என்பதாம்.

முதல் வரியில் அதுஇது என்பன பொருள்களைச் சுட்டியுண ரும் நிலையைக் குறிப்பன. இரண்டாம் வரியில் அது என்பது வினையின் நீங்கி விளங்கி நிற்கும் இறைவனைக் குறிப்பது. அப் பெருமானே தனது கருணையினுல் உயிர்க்குயிராய் விளங்கி உடனுய் நிற்கின்ருன் என்பதை 'இது என்றறிந்து' என்ற தொடர் விளக்கி நிற்கின்றது. இது-இவ்வுயிர், அவிழ்ந்த சடை-விரிந்த சடை. இறைவனை 'அவிழ்ந்த சடையான்' என்றும், 'தாழ்சடையான்' என்றும் குறிக்கும் வழக்கம் மிகுதியும் காண லாம். 'தானும்தன் தையலும் 'தாழ் சடையோன் ஆண்டில னேல்' என்னும் திருவாசகமும்' தாழ் சடையான் பனந்தாள் திருத் தாடகையீச்சரமே' என்னும் திருஞானசம்பந்தர் தேவாரமும் காண்க. திருப்பனந்தாளில் எழுந்தருளியிருக்கும் இறைவனது திருப்பெயர் 'செஞ்சடையப்பர்' என்பதாகும். இத்திருப்பெயரை இவ்வூர்ப் பதிகத்து ஐந்து இடங்களில் குறித்துச் செல்கின்ருர் திருஞானசம்பந்தர். அத்திருமுடியே குறைவுடைய மதியைக் காத்தருள் செய்தது; அதுவே உயிர்களுக்கு நேர்ந்த பெரும் விபத்தாகிய கங்கைப் பெருக்கைத் தடுத்து அருள் செய்தது; அதுவே பகைப்பொருளாகிய மதியத்தையும் பாம்பையும் ஒருங்கு தாங்கி, உயிரினங்கள் அனைத்தும் பகையின்றி வாழ வேண்டும் என்ற பண்பினை அறிவித்து நிற்பது; அதுவே புண்ணியஞ் செய்வார்க்கு வன்னியும் கொன்றையும் எருக்கும் அணிய இடனுய் நின்று அருள் செய்வது; என்னும் குறிப்பினை அவ் வைந்து இடங்களும் விளக்கி நிற்கின்றன. இத்தகைய கருத் துக்களை யெல்லாம் ஒருங்கு சிந்திக்குமாறு செய்த 'அவிழ்ந்த சடையார்' என்னும் தொடரினை மறக்கலுமாமே!

(தொடரும்)

# கேரள நாட்டுச் சிவத்தலங்கள்

புலவர், திரு. S. G. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்,
திருவனந்தபுரம்.

## 1. செல்லூர்.

கேரளத்தின் வட பகுதியாகிய மலபாரிலுள்ள ஒரு புகழ் பெற்ற சிவத்தலம் செல்லூர். உலகில் பெருகிவரும் கலிதோஷம் நீங்கும் பொருட்டுச் சதசோமன் என்னும் இரவிகுல வேந்தன் கைலையங்கிரியில் கடுந்தவமியற்றிச் சிவபெருமானிடம் தான் பெற்று வந்த சோதிலிங்கத்தைப் பிரதிட்டித்து வழிபட்ட இடம் அது.

பெருஞ்செல்லூர், இலட்சுமிபுரம், தளிப்பறம்பு என்பன அவ்வூரின் பிற பெயர்களாம். 'செல்' என்னும் சொல்லிற்குச் 'செல்வம்' என்றோர் பொருளுண்டு. செல்வச் செழிப்புற்ற ஊரா கையால் அது 'செல்லூர்', 'பெருஞ்செல்லூர்' என அறியப்பட லாயிற்று. பரசுராமனது வேண்டுகோளிற்கிணங்கத் திருமகள் அவ்வூரில் உறைகின்றாள் என்பது ஐதிகம். அக்காரணத்தால் 'இலட்சுமிபுரம்' என்ற பெயர் அதற்கு ஏற்பட்டது. 'தளி' என்னும் சொல்லிற்குக் 'கோயில்' என்பது பொருள். கோயி லுள்ள இடம் என்பது தோன்ற அவ்வூரைத் 'தளிப்பறம்பு' என ஆன்றோர் அழைக்கலாயினர். இன்று அப்பெயரிலேயே அது பெரிதும் அறியப்படுகின்றது.

செல்லூரின் பெருமைகளைக் கூறும் நூல்கள் பலவுள. அவற்றுள் "செல்லூர் நாதோதயம் சம்பு" என்னும் பிரபந்தம் சத சோமனது தவத்தைக் குறித்தும் அவன் அங்கு கோயிலெடுத்த சிறப்பைக் குறித்தும் அழகாகக் கூறுகின்றது. அக்கதை வருமாறு:—

முன்னொரு காலத்தில் செல்லூரைச் சதசோமனென்னும் இரவி குல வேந்தன் ஆண்டு வந்தான். சிவபத்தியிற் சிறந்த அவன் கலிதோஷத்தினல் உலகில் பெருகி வரும் துன்பத்தைக் கண்டு மனங்கவன்ருன். அதனைப் போக்க யாது வழியெனச் சிந்தையில் ஆழ்ந்தான். அவ்வமயம் அகத்திய முனிவர் அங்கு தோன்றிக் கைலையங்கிரியிலுள்ள ஓர் சிவலிங்கத்தின் மகிமையை எடுத்துரைத்தார்.

கதிரவனிடமிருந்து விசுவகருமாவினல் பிரிக்கப்பட்ட மூன்று கலைகள் சோதிலிங்கங்களாக உருப்பெற்றன. நாள் தொறும் வளர்ந்து வந்த அவற்றின் வெம்மையைத் தாங்கலாற்ருது பிரம்மன், திருமால், இந்திரன் முதலிய தேவர்கள் சிவபெருமானைச் சரண் அடைந்தனர். அம்மூன்று லிங்கங்களையும் அவரே ஏற்றருள வேண்டுமெனப் பணிந்தனர். கருணைக் கடலாகிய கண்ணுதற் கடவுள் அவ்வண்ணமே அருள் புரிந்தார். அச்சிவலிங்கங்களை உமாதேவியார் பத்தியொடு வழிபட்டு வரலாயினர்.

அங்ஙனம் பலநாட்செல்ல, மாந்தாதா என்னும் மாண்புடை மன்னன் அருந்தவம் இயற்றி அவற்றுள் ஒன்றைப் பெற்று வந்து உலகில் பிரதிட்டித்துக் கோயிலெடுத்தான். அவன் மைந்தனுகிய முசுகுந்தனும் அவ்வண்ணமே மற்ருென்றைத் தவத்திற் பெற்ருன். இன்னும் ஓர் சிவலிங்கம் உளது. அதனைச் செல்லூரில் பிரதிட்டித்துக் கோயில் கட்டி வழிபட்டால் கலி தோஷம் அகலுமென அகத்தியர் சதசோமனிடம் மொழிந்தார்.

அவரது ஆணையின்படி அவ்வேந்தன் கைலையை அடைந்தான். கடுந்தவம் புரிந்தான். உமைபங்கனிடம் சிவலிங்கத்தைப் பெற்று வந்தான். செல்லூரில் பெரியதொரு கோயிலும் தீர்த்தக் குளமும் கட்டுவித்துச் சிறப்புடன் சிவப்பிரதிட்டை நடத்தினுன். பூசையும் திருவிழாவும் விமரிசையாக நடந்து வந்தன.

அதன் பின்னரும் அவனது உள்ளம் அமைதியின்றித் தவித்தது. ஒரு நாள் தியானத்திலிருக்கையில் சிவபெருமான்

அவன் முன் தோன்றி "இக் கோயிலின் கிழ்த்திசையில் கூப்பிடு தூரத்தில் கதிரவன் வழிபட்ட இடமொன்றுள்ளது. அங்கு ஒரு சிவலிங்கம் தென்படும். அவ்விடத்தில் ஒரு கோயில் கட்ட வேண்டும்" என அருளிச் செய்தார். அவ்விதமே செய்ய அவனது மனக்கவலை அகன்றது.

ஆதித்தன் வழிபட்ட இடம், தளிப்பறம்பிற்கு அருகிலுள்ள 'காஞ்ஞிரங்ஙாடு' என்ற சிறு கிராமமாகும். பன்னிரு சூரியர்களுள் ஒருவனுக்கு முன்னமோர் சாபத்தினுல் குட்டநோய் தோன்றிற்று. கருடனது உபதேசப்படி அவன் காஞ்ஞிரங்ஙாட்டில் சிவப்பிரதிட்டை செய்து வழிபட்டான். இறைவன் அருளால் நோயகன்றது. கதிரவனது நோய் நீங்கிய அவ்விடத்தில் சென்று விரதமிருந்தால் நோய்கள் அகலுமென்ற நம்பிக்கை இன்றும் மக்களிடையே உள்ளது. பலர் அவ்விதம் விரதமிருந்து அருள்பெற்று வருகின்றனர்.

கும்போதரனது கூற்ருக வைத்து மேலே குறிப்பிட்ட பிரபந்தத்தில் செல்லூரின் பெருமைகளைக் கவிஞர் அழகாக வருணிக்கின்ருர். உலகெலாம் சுற்றிவந்த கும்போதரன் வழியில் தான் கண்ட காட்சிகளைச் சிவபெருமானிடம் எடுத்துரைத்தான்.

"பிரம்மலோகம், வைகுண்டம் போன்ற இடங்களைத் தாண்டி மானிடர் வாழ்வதும் உலகங்களிற் சிறந்ததுமாகிய பூலோகத்தை அடைந்தேன். அக்கடல்சூழ் உலகில் மழுப்படைதாங்கிய பரசுராமன் படைத்த கேரளநாடு அளவற்ற இன்பங்களுக்கு இருக்கையாக விளங்குகின்றது. அந்நாட்டிலுள்ள அறுபத்துநான்கு கிராமங்களுள் திலகம்போல் திகழ்வது செல்வச் செழிப்புற்ற செல்லூர். அவ்வூரில் அந்தணர் இல்லங்கள் மூவாயிரம் உள. கதிரவனைப்போல விளங்கும் அக்கிராமத்திலிருந்து நாற்றிசையும் வேதவொளி பரப்பும் அவ்வில்லங்கள் ஆதித்தனது கிரணங்களைப் போலப் பிரகாசிக்கின்றன."

கேரளம் அறுபத்துநான்கு கிராமங்களாகப் பகுக்கப்பட்டிருந்ததென்பது பண்டை நூல்களில் காணக்கிடக்குமோர் செய்தி

யாகும். அவற்றுள் முக்கியத்துவம் வாய்ந்ததாகச் செல்லூர் பண்டுதொட்டே எண்ணப்பட்டு வந்துள்ளது.

மார்கழித் திருவாதிரையன்று செல்லூரில் சிறப்புடன் திருவிழா நடைபெறும். அந்நாளில் செல்லூரிலிருந்து சுவாமி காஞ்ஞிரங்ஙாட்டிற்குச் சென்று வருவார்.

திருவிழாவை யொட்டி ஆண்டு தோறும் அவ்விடத்தில் கலைப்போட்டிகள் நிகழ்வது வழக்கம். போட்டிகளிற் கலந்து கொள்வதற்காகப் பல இடங்களிலிருந்து புலவர்களும், சாக்கியார்கூத்து, பாடகம் போன்ற கேரளநாட்டுக் கலைகளில் தேர்ச்சி பெற்ற கலைஞர்களும் அங்கு குழுமித் தத்தம் திறமைகளைக் காட்டிப் பரிசு பெற்று மீள்வர். போட்டியிற் கலந்து கொள்ள விரும்புவோர் குறிப்பிட்ட ஒரு தொகை கோயிற்படியில் வைக்கவேண்டும். அது இக்காலத்தில் போட்டிகளுக்குக் கட்டணம் செலுத்துவது போன்றதோர் வழக்கம் போலும். வெற்றிபெற்ற கலைஞர்களுக்குப் பட்டங்களும் பரிசுகளும் வழங்கிவந்தனர். அங்ஙனம் அக்கோயில் கலைவளர்ச்சிக்கூடமாகவும் திகழ்ந்து வந்துள்ளது.

திருவிதாங்கூர், கொச்சி, மலபார் என்னும் முப்பகுதிகள் கொண்டது கேரளம். அவற்றுள் வடபகுதியாகிய மலபாரிலுள்ள கல்லிக்கோட்டை (கோழிக்கோடு) பட்டணத்திலிருந்து சுமார் 60 மைல் வடக்குள்ளது அவ்வூர். கோழிக்கோட்டிலிருந்து அவ்வூருக்குச் செல்லப் பஸ் வசதியுண்டு. அவ்வூரின் எல்லைகளாக நூலிற் கூறப்படுவன வடக்கு கிள்ளாறும், தெற்கு நெய்யாறுமாம். இவை முறையே கொப்புழை, வளர்பட்டணம் புழை என இன்று அறியப்படும் நதிகளாமென அந்நூலின் உரைகாரர் கூறுகின்ருர்.

சதசோமன் கட்டிய கோயிலிற்குக் காலப் பழக்கத்தால் பல மாறுதல்கள் ஏற்பட்டுள்ளனவேனும் கேரள நாட்டிலுள்ள புகழ்மிக்க சிவத்தலங்களுள் ஒன்ருக அவ்வூர் திகழ்கின்றது.

# திருமலைநாயக்கர் மஹால்

திரு. கோ. பன்னீர்செல்வம் அவர்கள்

"கலை, கடவுளின் அம்சங்களில் ஒன்று; கலையை உணர்ந்து ரசிப்பது கடவுளே அருகில் இருப்பதைப் போன்ற பேரின்ப உணர்வை ஏற்படுத்த வல்லது" என்று இந்திய ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள், சமீபத்தில் சென்னையில் ஒரு கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

சிற்பக் கலையைக் காணும் ஒருவன் மனத் தெம்பையும், உத்வேகத்தையும், பேரின்ப உணர்வையும் பெறுகிறான் என்கிறார் தத்துவமேதை ரஸ்கின்.

இதனால்தான் தமிழர்கள் ஆதி நாள் தொட்டு கலையைப் போற்றிக்காத்து, வளர்த்து வந்திருக்கிறார்கள். அத்தோடு கலையும், சமயமும் தமிழகத்தில் இணைந்தே வளர்ந்து வந்திருக்கின்றன. தமிழகத்திலுள்ள கோயில் ஒவ்வொன்றும் இதற்குச் சான்று பகரும். வழி வழியாக வந்த தமிழ் மன்னர்கள் அனைவரும், கலைக்காவலர்களாகவே திகழ்ந்திருக்கிறார்கள்.

திருமலைநாயக்கர் மஹாலைக் கட்டிய திருமலைநாயக்க மன்னன், சிற்பிகள் தங்கள் வேலையில் முழுமூச்சுடன் ஈடுபட்டிருக்கும் போது, தானே நேரில் சென்று, அடப்பக்காரனைப் போல் அவர்களுக்குத் தாம்பூலம் மடித்துக்கொடுத்து, அவர்களை ஊக்குவிப்பது வழக்கமாம். கலைத்தேவியின் தொண்டிலே ஈடுபட்டிருக்கும் கலைஞர்களுக்கு, அடப்பக்காரனைப் போல் வெற்றிலை

---

மேலே காணும் கட்டுரை சென்னை அகில இந்தியா வானொலி நிலையத்தார் அவர்களின் இசைவு பெற்று வெளியிடப்பெற்றுள்ளது.

மடித்துக் கொடுக்கும் அரசனைப் பெற்றிருந்த தமிழகம், என்றும் அழியாத கலைச்செல்வங்களை உருவாக்கியிருப்பதில் என்ன ஆச்சரியம் இருக்க முடியும்?

தமிழகச் சிற்பிகள் ஒவ்வொருவரும் சிற்ப சாஸ்திரத்தில் வல்லுநர்களாக விளங்கியவர்கள். ஒரு பெண்ணின் சுண்டு விரல் நகத்தை மட்டுமே பார்த்து அப்பெண்ணின் முழு உருவத்தையும் சிலையாக வடித்துவிடக் கூடிய திறமை வாய்ந்த சிற்பிகள் அந்தக் காலத்தில் இருந்ததாகக் கூறப்படுகிறது. சாமுத்திரிகா லட்சணப்படி ஓர் அவயவத்தை மட்டுமே பார்த்து, முழு உருவமும் இப்படித்தான் இருக்க வேண்டும் என்பதை அவர்களால் நிர்ணயித்து விட முடியுமாம்!

திருமலை நாயக்கரால் கட்டப்பட்ட புது மண்டபத்தில், நாயக்க அரச வம்சத்தினரில் முக்கியமான பத்து அரசர்களின் சிலைகள் உள்ளன. இச்சிலைகள் எல்லாவற்றுள்ளும், திருமலை நாயக்கரின் சிலை மிகவும் தத்ரூபமாக அமைந்திருக்கிறது. அவரது பருத்த வயிறு, அதில் உள்ள மடிப்புக்கள், அவரது கண்களின் அமைப்பு, ஆகிய அனைத்தும் திருமலை நாயக்கரே உயிர் பெற்று வந்தாற்போல் அமைந்திருப்பதைக் காணலாம். அதே சிலையில் திருமலை நாயக்கரின் மனைவி சிலையும் சேர்ந்தாற்போல் செதுக்கப் பட்டுள்ளது.

இப்படி சிற்ப சாஸ்திரம், சிறந்து விளங்கிய தமிழகத்தில், திருமலை நாயக்கர் மஹாலைப் போன்ற கலைவிந்தைகள் தோன்றியிருப்பதில் ஆச்சரியமில்லை.

தமிழ், சமயம், கலை இம்மூன்றுக்கும் பெயர் பெற்றது மதுரை. தென்னிந்தியாவிலேயே மிகவும் பழைமையான நகரங்களில் தலையாயது இது. பண்டைப் பண்பாட்டிற்கும், நாகரிகத்திற்கும் இன்றும் நிலைக்களனாக உள்ள நகரங்கள், உலகிலேயே ஒரு சில தான் எஞ்சி இருக்கின்றன. அச்சிலவற்றுள் ஒன்றாக மதுரை மாநகரம் விளங்கி வருகிறது.

மதுரை மாநகரத்தின் இத்துணைச் சிறப்பிற்கும் வழிவகுத்தவர்கள் சங்ககாலப் பாண்டிய அரசர்களும், பிற்கால நாயக்க

மன்னர்களுமேயாவர். விசுவநாதநாயக்கர் காலம் முதல் அரசி மீனுட்சி காலம் வரை, 1529-ம் ஆண்டிலிருந்து 1736-ம் ஆண்டு வரை, 200 ஆண்டுகளுக்கு மேல் ஆட்சி செலுத்திய நாயக்க அரசர்களில்-விசுவநாத நாயக்கர், திருமலை நாயக்கர், அரசி மங்கம்மாள் ஆகிய மூவருமே மதுரையோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள்; வரலாற்றுச் சிறப்பும் பெற்றவர்கள்.

இவர்களுள், திருமலைநாயக்கர் கி. பி. 1623-ம் ஆண்டு ஆட்சிக்கு வந்து கி. பி. 1659 வரை 36 ஆண்டுகள் அரசாண்டார். இவர் முதன் முதலில் திருச்சியைத் தலைநகராகக் கொண்டு பத்து ஆண்டுகள் ஆட்சி செலுத்தினுரென்றும், அவ்வூரின் வெப்பதட்ப நிலை இவருக்கு ஒத்துவராததால் நோய்வாய்ப்பட்டார் என்றும், ஒருசமயம் மதுரைக்குவரும் வழியில் திண்டுக்கல்லில் தங்கியிருந்த போது, மதுரை மீனுட்சி சுந்தரக் கடவுள் இவர் கனவில் தோன்றி, மதுரைக்கு நிலையாக வந்து விட்டால் நோய் குணமாகுமென்று கூறியதாகவும், அவ்வாறே இவர் செய்ய இசைந்து மதுரையைத் தலைநகராக ஆக்குவதற்கு ஐந்து லட்சம் பொன் செலவிட வாக்களித்ததாகவும், மறுநாள் காலையில் எழுந்து பல் துலக்கியவுடன் இவரது நோயும் நீங்கிற்று என்றும் கூறுவர்.

அதன் பிறகே பல நாடுகளிலிருந்தும் பெயர் பெற்ற சிற்பிகளை வரவழைத்து, மதுரையில் பெரிய மாட மாளிகைகளையும் கூட கோபுரங்களையும் எழுப்பியதோடு, மீனுட்சி கோயிலையும் அதன் சுற்றுத் தெருக்களையும் புதுப்பித்து, கோயிலுக்கு விலையுயர்ந்த அணிகலன்களையும், பரிவட்டம், வாகனங்கள், தேர் முதலியனவற்றையும் அளித்தாரென்றும் கூறப்படுகிறது. அதோடு, தன்னுடைய ஆண்டு வருமானமான 12 லட்சம் பவுன்களில், ஆண்டொன்றுக்கு 41 ஆயிரம் பவுன் வருமானம் தரத்தக்க நிலங்களையும் இவர் கோயிலுக்கு எழுதி வைத்தாரென்றும் தெரியவருகிறது.

திருமலை நாயக்கர் காலத்தில் தான், மதுரை நகரில் இன்று காட்சியளிக்கும் நாயக்கர் மஹால் என்றழைக்கப்படும் அரண்மனையும், வண்டியூர்த் தெப்பக்குளமும், புது மண்டபமும்,

இராய கோபுரமும், தமுக்கம் அரண்மனையும் நிர்மாணிக்கப் பட்டன.

இத்தகைய அருமையான சிற்பச் செல்வங்களைப் படைத்து, அவைகளைக் கலை விந்தைகளாக நிலவவிட்ட காரணத்தால், இவரைத் "தென்னிந்திய ஷாஜஹான்" என்று மக்கள் அழைக்க லாயினர்.

மதுரை மீனுட்சியம்மன் கோயிலுக்குத் தென்கிழக்கே மூன்று பர்லாங் தூரத்தில் திருமலை நாயக்கர் மஹால் அமைந் திருக்கிறது. மதுரை மாநகரின் பழைய அமைப்பின்படி பார்த் தால், கோயில் அமைந்திருக்கும் நிலபரப்பைவிட இக்கட்டிடம் பெரியதாக இருந்திருக்கவேண்டு மென்றும், தற்போது கீழ மாசி வீதியும் தெற்கு மாசி வீதியும் கூடுமிடத்தில்தான் இதன் நுழை வாயில் இருந்திருக்க வேண்டுமென்றும் தெரிகிறது. இம் மஹாலுடன் சேர்த்து எண்ணத்தக்க பத்துத் தூண்கள், இத னேடு தொடர்பற்று வெளியில் இருப்பதால், இன்று காட்சி யளிக்கும் மஹால் பழைய கட்டிடத்தின் ஒரு சிறு பகுதியாகவே இருக்கவேண்டுமென்று எண்ண இடமிருக்கிறது.

திருமலை நாயக்கரின் பேரனுன சொக்கநாத நாயக்கர், தலை நகரை மதுரையிலிருந்து திருச்சிக்கு மாற்றியபோது, அங்கு அரண்மனை அமைத்துக்கொள்ள, மஹாலிலுள்ள நல்ல கருங்கல் தூண்களையும், விலை உயர்ந்த கட்டிடப் பொருட்களையும் அகற்றி, திருச்சிக்கு எடுத்துச் சென்று விட்டதால், மஹாலின் பெரும் பகுதி இடிக்கப்பட்டு, அதன் தோற்றம் சிறிதாயிற்று என்று சரித்திர வரலாறு கூறுகிறது.

திருமலை நாயக்கர் நிர்மாணம் செய்த நிலையில் அரண் மனை முழுதும் அப்படியே இருந்திருக்குமானுல், திருமலைநாயக் கர் மஹால் உலகிலேயே ஒப்புயர்வற்ற ஒரு கலைப் பொக்கிஷ மாக இன்று விளங்கிக் கொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை.

இவ்வளவு பிரமாண்டமான கட்டிடத்தின் எப்பகுதியிலும், மரமே பயன்படுத்தப்படவில்லை யென்பது குறிப்பிடத்தக்கது.

மஹாலும் முழுவதும் செங்கற்களாலும், சுண்ணும்புக் காரை யினுலும் மட்டுமே எழுப்பப்பட்டிருக்கிறது.

இந்தக் கட்டிடத்தின் சிற்ப அமைப்பு, கோயில் சிற்ப அமைப்பைவிட முழுதும் வேறுபட்டு, புதுமாதிரியாக இருக் கிறது. கோயில் அல்லாத இத்தகைய கட்டிடங்களின் கூரைப் பகுதிகள், வளைவாகக் கும்பம் போன்று அமைக்கப்பட்டிருக் கின்றன. கோயில்களின் கூரை இதற்கு மாருகப் பெரும்பாலும் சமதளமாகவே இருக்கக் காண்கிறோம்.

திருமலை நாயக்கர் மஹாலின் நடுவில் கிழக்கு மேற்காக சுமார் 160 அடி நீளமும், வடக்கு தெற்காக சுமார் 100 அடி அகலமும் கொண்ட பெரிய திறந்தமுற்றம் ஒன்று இருக்கிறது. இம்முற்றத்தைச் சுற்றிலும் நான்கு பக்கங்களிலும் உள்ளகூடம் 40 அடி உயரமுள்ள பெரும் பெரும் தூண்களால் தாங்கப்படும் வளைந்த கூரையோடு கூடியது. இக்கூடத்தின் எழில் தோற் றம் பார்ப்போரைப் பரவசத்தில் ஆழ்த்தும் வண்ணம் அமைந் திருக்கிறது. சலவைக் கல்தானே என்று ஐயுறும் வண்ணம், வெறும் சுண்ணும்புக் காரையினுல் அமைக்கப்பட்டிருக்கும் இதில், தென்னுட்டிற்கே உரிய அதி நுட்ப வேலைப்பாடுகளைக் காணலாம். ஒரு தென்னைமர அளவு உயரமுள்ள இத்தூண்கள் ஒவ்வொன்றும், இரு கைகளாலும் கட்டி அணைக்க முடியாத அளவு பருமனுனவை.

மஹாலின் மேற்குப் பகுதியில், கன்னிமாடம் அகலமாக வும் அழகாகவும் அமைந்திருக்கிறது. அக்கன்னிமாடம் வடக்கு தெற்காக 235 அடி நீளமும், கிழக்கு மேற்காக 105 அடி அகல மும் கொண்டது. இதன் கூரை ஐந்து வரிசைகளில் அமைந் திருக்கும் பெரும் பெரும் தூண்களால் தாங்கப்படுகிறது. கூரை யில் 'டும்' என்றழைக்கப்படும் மூன்று பெரிய குவி மாடங்கள், தலைகீழாக கவிழ்த்து வைக்கப்பட்டு குங்குமச் சிமிழ்போல் அமைந்திருக்கின்றன. அவைகள் பார்ப்பதற்கு, மசூதியில் உள்ள குவிமாடம் போல் காட்சியளிக்கின்றன.

இம்மூன்று குவிமாடங்களில், நடுவில் உள்ளது மிகவும் பிர மாண்டமானது. இம்மாடம், சதுர உருவில் அமைந்துள்ள

பன்னிரண்டு தூண்களால் தாங்கப்படுகிறது. இத்தூண்கள் ஒவ்வொன்றும் பண்டைய கிழக்கு ஜெர்மானிய கட்டிடக்கலை நுணுக்கம் கொண்ட வில்வடிவான மேல் வளைவுகளால் ஒன்றுக்கொன்று இணைக்கப்பட்டுள்ளன. மூலைத்தூண்களுக்குப் பக்கத்திலுள்ள தூண்களும் இவ்விதமே வளைவுகளால் ஒன்றுக்கொன்று இணைக்கப்பட்டிருப்பதால் வளைவுகள் எண்கோண வடிவில் அமைந்திருக்கின்றன. இந்த எண்கோண வடிவ வளைவுகளுக்கு மேல் செங்குத்தாக எண்கோண பீப்பாய்போன்ற அமைப்பு, $45\frac{1}{2}$ அடி உயரத்தில் வட்டவடிவாக மாறி, குவிமாடத்தைத் தாங்கி நிற்கிறது.

தரையிலிருந்து இக்குவிமாடத்தின் உச்சி இரண்டு தென்னை மர அளவு அதாவது 75 அடி உயரமிருப்பதால் இதன் அமைப்பு காண்போரின் உள்ளத்திற்குக் கிளர்ச்சி தருவதாக அமைந்திருக்கிறது. அத்தோடு, அதன் பிரமாண்டமான தன்மை, மனிதனின் அகந்தையை அகற்ற வல்லதாகவும் அமைந்திருக்கிறது.

இதன் முகப்பில் கண்ணைக் கவரும் அழகு வாய்ந்த நுழைவாயில் உண்டு. அதன் தூண்கள் 55 அடி அதாவது சுமார் 10 ஆள் உயரமுள்ளது.

இந்தப் பெரிய குவிமாடத்தினடியில், சொர்க்க விலாசம் என்றழைக்கப்படும் அத்தாணி மண்டபம் இருக்கிறது. கலைத்திறன், படைப்பு நேர்த்தி. நுட்ப வேலைப்பாடு ஆகியவற்றில் இதற்கு ஈடு இணையானவை உலகிலேயே மிகச்சிலவே உள்ளன. இதற்கு மேற்கே, மிகப்பெரிய குவிமாடத்தின் நடுவில் கருங்கல்லிலான சதுரமான கட்டிடம் ஒன்று உண்டு. அதற்குள்ளே தந்தத்தாலான அறை ஒன்று இருந்ததாம். இவ்வறையின் நடுவேதான் எழில்மிகு அரியணை ஒன்றும் இருந்ததாம். ஆண்டுதோறும் ஒன்பது நாள் நடக்கும் நவராத்திரி விழாவின்போது, அரசர் இச்சிம்மாசனத்தில் அமர்ந்திருக்க, அவரைச் சுற்றிலும் அவருக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசர்கள், தங்கள் வணக்கத்தையும் மரியாதையையும் தெரிவிக்கத் தங்கள் தங்கள் கொடியுடன் அமர்ந்திருப்பார்களாம்.

இது டில்லி செங்கோட்டையில் மொகலாய அரண்மனை யிலுள்ள 'திவானி ஆம்' என்ற அரங்கோடு ஒப்பிடத்தக்கது

இத்திருமலை நாயக்கர் மஹாலானது கலைநுட்ப வேலைப்பாடு டையது மட்டுமன்றி, மிகவும் பயனுள்ள ஒரு கட்டிடமாகும். இந்தியாவிலேயே வேறு எங்கும் இல்லாதவாறு, அவ்வளவு பெரிதானதாகவும், நேர்த்தி வாய்ந்ததாகவும் இக்கட்டிடம் விளங்குகிறது. இதைக் கண்ணுறும் கட்டிடக்கலை நுணுக்க வல்லுநர்கள், இந்து—முகமதிய—பண்டைக் கிழக்குச் ஜெர் மானியக் கட்டிடக்கலை அம்சங்கள் அனைத்தும் இதில் இணைந்து மிளிர்வதைக் கண்டு மிகவும் அதிசயிக்கின்றனர்.

உலக அதிசயங்களில் ஒன்றான தாஜ்மஹாலைக் கட்டி அழியாப் புகழ்பெற்ற ஷாஜஹானைப் போல, திருமலை நாயக்கர் மஹாலை நிர்மாணித்ததின் மூலமாக, இன்றும் மக்களது உள்ளங்களிலே 'கலை அரசராக' கொலுவீற்றிருக்கிறார் திருமலை நாயக்க மன்னர்.

---

# தஞ்சாவூர்
# இராச ராசேச்சரக் கல்வெட்டு வரலாறு

வித்துவான், திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர்.

[மலர் 13. இதழ் 11-ன் தொடர்ச்சி]

முதலாம் இராசராசன் தஞ்சாவூரில் இராச ராசேச்சரத்துக்குத்தெற்கிலும் வடக்கிலும்தளிச்சேரிகளைப் புதியனவாக அமைத்தான். அவைகளுக்குத் தெற்குத் தளிச்சேரி தென்சிறகு, ஷ வடசிறகு, வடக்கில் தளிச்சேரி தென்சிறகு, ஷ வடசிறகு, (பெயர் புலப்படாதவாறு கல்வெட்டில் சிதைந்துபோன) மற்றொரு தளிச்சேரி, என்னும் பெயர்களை வைத்தான். தெற்குத் தளிச்சேரி தென்சிறகில் 92, ஷ வடசிறகில் 92; வடக்கில் தளிச்சேரி தென் சிறகில் 95, ஷ வடசிறகில் 96, மற்றொரு தளிச்சேரியில் 25 ஆக 400 வீடுகளைக் கட்டினான்.

சோழமண்டலத்திலுள்ள அம்பர், அரபுரம், அவனிநாராயணபுரம், ஆமாத்தூர், ஆயிரத்தளி, திருவாரூர், திருவிடைமருதில், உத்தம தானிபுரம், திருவையாறு, கஞ்சாற நகரம், கடம்பூர், திருக்கண்டியூர், கருப்பூர், கற்பக தானிபுரம், காராயில், காவிரிப்பூம்பட்டினம், கிள்ளிக்குடி, திருக்கொள்ளம்பூதூர், கொற்றமங்கலம், கோட்டூர், சிகண்டபுரம், செல்லூர், திருச்சோற்றுத்துறை, தலையாலங்காடு, தளிச் சாத்தங்குடி, திருத்தெங்கூர், நயதிரபுரம், நல்லூர், நன்னிலம், நாகப்பட்டினம், நியமம், திருநெய்த்தானம், பந்தணைநல்லூர், பராந்தகபுரம், பல்லவ நாராயணபுரம், திருப்பழனம், பழுவூர், பழையாறை, பாச்சில், பாம்புணி, புதூர், புறையாச்சேரி, மண்ணி நகரம், திருமறைக்காடு, மிறையில், வடவாயில், வயலூர், வீரபுரம்,

---

அக்டோபர் 1962 "திருக்கோயில்" இதழிலுள்ள இக் கல்வெட்டு வரலாறு அறநிலைய பாதுகாப்புத் துறை ஆணையாளர் அனுமதியுடன் வெளியிடப் பெறுகிறது.

திருவெண்காடு, வேளூர், திருவேதிகுடி, ஜநநாதபுரம் முதலான ஊர்களிலுள்ள தளிச்சேரிகளிலிருந்து நானூறு தளிப்பெண்டுகளைக் கொண்டுவந்து, ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வீடாக மேற்குறித்த நானூறு வீடுகளிலும் குடியேற்றினுன். அவர்கள் ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு வேலி நிலத்தைப் பங்குசெய்து, அப்பங்குவழி ஒவ்வொரு வேலி நிலத்துக்கு வரக்கூடிய நூறு கல நெல்லை இராச கேசரியோடொக்கும் 'ஆடவல்லான்' என்னும் மரக்காலால் அவரவர்களுக்கு அளந்துவிடும்படி ஏற்பாடுகளைச் செய்திருந்தான். இவர்களைக் குடியேற்றினது கோயிற் பணிகளைப் புரிவதற்கேயாம். இந்த நானூறு தளிப்பெண்டுகளில் பெரும் பாலோர் அந்தந்த ஊர்களிலுள்ள திருக்கோயில்களில் தொண்டாற்றி வந்தவர்களே யாவர். இங்ஙனம் குடியேற்றப்பட்டவர்களில் சிலர் அரபுரத்துத் தாழிவிண்ணகரம், தஞ்சாவூர்த் தஞ்சை மாமணிக்கோயில், அம்பர் அவனிநாராயண விண்ணகர், பாம்புணி ஸ்ரீபூதிவிண்ணகர், என்னும் திருமால் திருக்கோயில்களில் பணிகள் புரிந்தோர் ஆவர்.

முதலில் இங்குக் குடியேற்றப்பட்டவர்கள் திருவையாற்று ஒலோகமா தேவீச் சரத்தில் பணிகள் ஆற்றிவந்த நக்கன் சேரமங்கை, நக்கன் இரணமுகராமி, நக்கன் உதாரம், நக்கன் பட்டாலி, நக்கன் எடுத்த பாதம், நக்கன் சோழகுல சுந்தரி, நக்கன் ஏகவீரி என்னும் எழுவர் ஆவர். நக்கன் என்பது தளிச்சேரிப் பெண்டுகளுக்கு அவர்கள் திறமை குறித்து இராசராசனுல் கொடுக்கப்பெற்ற சிறப்புப் பெயராகும். இங்ஙனமே ஏனைய முந்நூற்றுத் தொண்ணூற்று மூவர் பெயர்களின் முன்பும் தனித்தனி இந்த நக்கன் என்னும் சிறப்புப்பெயர் கொடுக்கப் பெற்றுள்ளது.

முதலாம் இராசராசன் திருவையாற்று ஒலோகமாதேவீச் சரத்துத் தளிச்சேரிப் பெண்டுகளில் சிலரைக் கொண்டுபோய் முதன்முதல் குடியேற்றியதற்குக் காரணம் அந்த ஒலோகமா தேவீச்சரம், அவனது முதற்பெருந்தேவியாராகிய ஒலோகமா தேவியாரால் கட்டப்பெற்றது. ஆதலால் அதிலிருந்து கொண்டுபோய்க் குடியேற்றுவது அத்தேவியார்க்கு உவப்பை உண்டாக்கும் என்னும் எண்ணம் பற்றியதாகலாம்; அல்லது

திருவையாற்றுத் திருப்பதிகத்தில், திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியுள்ள,

"வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி முகில்பார்க்கும் திருவையாறே"

என்னும் தேவார அடிகள் சிறந்த சிவபத்திச் செல்வனுகிய அவன் திருவுள்ளத்தில் பதிந்திருந்ததன் விளைவாய்த் திருவையாற்றுத் தளிச்சேரிப் பெண்டுகள் பண்டுதொட்டே நடனக் கலையில் தேர்ச்சி பெற்றவர்கள் என்று அவன் கருதியது ஆகலாம்.

இங்ஙனம் முதல் இராசராசன் தளிச்சேரிப் பெண்டுகளைக் குடியேற்றி அவர்களுக்கு நிவந்தம் அளித்ததோடு அமையாதது, அவர்களின் தொண்டுகளைக் கண்காணிக்க ஒருவரையும் நியமித்து அவர்க்கும் நிவந்தம் அளித்துள்ளான். இச்செய்தி "தளிச்சேரிப் பெண்டுகளுக்கும் காந்தர்விகளுக்கும் நாயகஞ் செய்யத் தஞ்சாவூர்ப் பரஞ்சோதிக்குப் பங்கு இரண்டு" என்னும் கல்வெட்டுப் பகுதி அறிவிக்கின்றது.

தளிச்சேரிப் பெண்டுகளுக்கு அளித்த நிவந்தங்களை உணர்த்தும் கல்வெட்டின் முற்பகுதியால், சோழமண்டலத்து ஊர்களில், வழக்கில் அதிகமாகப் பயிலப்பெருத சில கோயில்கள் புலப்படுகின்றன. அவைகள் அம்பரில் முதுபகவர்தளி, அரபுரத்தில் நிகளங்க ஈஸ்வரம், ஆயிரத்தளியில் மல்லீஸ்வரம், கடம்பூரில் இட்டாச்சி ஈஸ்வரம், நந்தீஸ்வரம், கோட்டூரில் குணவதி ஈஸ்வரம், பஞ்சவன்மாதேவீஸ்வரம், தஞ்சாவூரில் எரியூர் நாட்டுத்தளி, ஜயபீமதளி, பிரமகுட்டம், திருவாரூரில் அருமொழி ஈஸ்வரம், உலகீஸ்வரம், பிரஹ்மீஸ்வரம், மட்டைதென்தளி, நியமத்தில் அரிகுலகேஸரி ஈஸ்வரம், சந்திரமல்லி ஈஸ்வரம், நிருபகேசரி ஈஸ்வரம், நன்னிலத்தில் அமலீஸ்வரம், திருமேற்றளி, நாகப்பட்டினத்தில் நடுவில்தளி, பழுவூரில் பகைவிடை ஈஸ்வரம், பழையாறையில் அரையெருமான்தளி, சங்கீஸ்வரம், பாச்சிலில் திருமேற்றளி, திருவமலீஸ்வரம், பாம்புணியில் திருப்பாதாள ஈஸ்வரம், விடையபுரத்தில் திருப்புகழீஸ்வரம், முதலான கோயில்களாம்.

சரித்திரத்துக்குப் பயன்படும் சில செய்திகள்

1. திருக்காரோணத்து நக்கன் ராசகேசரிக்குப் பங்கு ஒன்றும் (Para 10)

2. முப்பத்தேழாம் விடு தஞ்சாவூர் எரியூர் நாட்டுத்தளி நக்கன் மாதேவடிகளுக்குப் பங்கு ஒன்றும் (Para 131)

3. இருபத்தொன்பதாம் விடு இத்தளி நக்கன் குந்தவைக் குப் பங்கு ஒன்றும் (Para 215)

ஐம்பதாம் விடு இத்தளி நக்கன் அருமொழிக்குப் பங்கு ஒன்றும்". (Para 236) என்னும் தொடர்களில் இராசகேசரி, மாதேவடிகள், குந்தவை, அருமொழி என்னும் பெயர்கள் வந்து உள்ளன. இவைகளில் இராசகேசரி என்பது முதலாம் இராச ராசனுடைய பட்டப்பெயர். மாதேவடிகள் என்பது முதலாம் இராசராச சோழனின் மகளாரின் பெயர். குந்தவை என்பது இராசராசனுடைய திருத்தமக்கையாரின் பெயர். அருமொழி என்பது முதலாம் இராசராச சோழனுடைய மற்ருெரு மகளாரின் பெயர்; "ராஜராஜ தேவர் திருமகளார் அருமொழி சந்திரமல்லி யாரான கங்கமாதேவியார்" என்னும் திருவையாற்று ஒலோக மாதேவிச்சரத்துக் கல்வெட்டுப் பகுதியே இதற்குச் சான்ருகும்.

குறிப்பு

இங்குக் குறித்த நான்கு பெயர்களில் இராசகேசரி என்பது முதலாம் இராசராசனுக்கு முன் இராசகேசரி என்னும் பட்டம் தரித்து ஆண்ட அரசர்களில் ஒருவர்பட்டப் பெயராகவும், மாதேவடிகள் என்பது முதற்பராந்தக சோழனது முதல் மகளு கிய இராஜாதித்தனின் தேவியாரின் பெயராகிய மாதேவடிகள் என்னும் பெயராகவாவது (அல்லது) செம்பியன் மாதேவியார்க் குரிய மாதேவடிகள் என்னும் பெயராகவாவது இருக்கலாம்.

இங்ஙனம் அரச குடும்பத்தாரின் திருப்பெயர்களைத் தளிச் சேரிப் பெண்டுகளுக்கு வைத்து வழங்கப் பெற்றமையால் இத் தளிச்சேரிப் பெண்டுகளின் பெற்ருேர்கள் அரச குடும்பத்தில் அளவிறந்த இராச பக்தி உடையவர்களாய்த் திகழ்ந்திருந்தனர் என்று கொள்ளலாம்.

---

(வளரும்)

## நீதிநெறி விளக்கம்

### உரைநடையும், ஆங்கில மொழிபெயர்ப்பும்*

பாலகவி, வயிநாகரம்

திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,

தேவகோட்டை.

[மலர் 14, இதழ் 1-ன் தொடர்ச்சி]

கற்பன ஊழற்றுர் கல்விக் கழகத்தாங்
கொற்கமின் றூத்தைவாய் அங்காத்தல்—மற்றுத்தம்
வல்லுரு அஞ்சன்மின் என்பவே மாபறவை
புல்லுரு அஞ்சுவ போல்.

நல்ல நூல்களைக் கற்றற்குரிய ஊழ் இல்லாதவர்கள் புலவர்கள் நிறைந்த அவைக் கழகத்தில் நாவடக்கம் இல்லாமல் தமது ஊத்தை வாயைத் திறந்து பயனற்ற சொற்களைச் சொல்லுதல் திணைப்புனம் முதலியவற்றில் விளைவைக் கவரவரும் விலங்கு, பறவை முதலியவை அஞ்சும்படி வைக்கோலால் அமைத்து வைக்கப்பட்ட உருவம் போன்று "எம் வலிய உருவத்தைக் கண்டு அஞ்சாதீர்கள்" என்று சொல்லுவது போலாகும்.

### The audacity of the unlearned

The shameless opening of their impure mouths to utter useless words in the assembly of the learned, by those who are not destined to possess true learning merely serves to dissipate the fear caused by their formidable figure—just as the fear that birds and beasts have when they look at a scare-crow. 23

---

Translated by: Sri P. Mutharasu M. A., B. T., Lecturer in Tamil, Sri. K. G. S. Arts College, Arulnandi Nagar, Srivaikuntam.

போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி
மீக்கொள் நகையினர் வாய்ச்சேரா—தாக்கணங்கும்
ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கொளப்படுவ தில்.

குற்றமற்றதும் விட்டு நீங்காததுமான நல்ல கல்வி, அறிவு மிகுந்தவர்களிடத்தல்லாமல் சுற்றலில் கருத்துச் செலுத்தாது மேம்பட்ட நகையையுடையவர்களாய் வீண் பொழுது போக்கு பவர்களிடத்துச் சேரமாட்டாது. தீண்டி வருத்துகின்ற பெண் தெய்வமும் ஆணுருவத்தை எடுக்க விரும்பும் தோற்றத்தை ஒரு பெண் உடையளாயினும், அப்பெண்ணினிடம் துய்க்கப் பெறும் இன்பம், ஆணும் பெண்ணுமல்லாத பேடொன்றினுல் கொள்ளப் படுதல் இல்லையாகும்.

## Learning's benefit only to the intelligent

Imperishable learning is attainable only by those endowed with profound intellectual powers; but not by those who revel in vain-glorious laughter. Though a woman possesses charms that will induce an enticing siren to hanker for manhood even such charms are of no use to an asexual (a person without sexes). 24

கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறூஉம்
குற்றந் தமதே பிறிதன்று—முற்றுணர்ந்தும்
தாமவர் தன்மை உணராதார் தம்முணரா
ஏதிலரை நோவ தெவன்?

தாம் கற்ற நூற் பொருள்களைக் கல்வியறிவில்லாதவர் களுக்குச் சொல்லி அதனுல் சிறுமையை அடைகின்ற குற்றம் அக்கற்றவரதேயன்றி வேறொருவரது அன்று. எல்லாவற்றை யும் அறிந்திருந்தும் கல்லாதவர்களது தன்மையை உணராதவர் களாகிய கற்றவர்கள் அவர்களை அறிந்து மதியா அம் மூடரை உள்ளிட்ட அயலாரை நோவது என்ன பயன் கருதியோ?

The fault of addressing learning to the illiterate

If the learned meet with contempt and disrespect at the hands of the ignorant, while forcing instruction into their ears, the blame is theirs and they can have none to complain of. Why should they find fault with others, when with all their learning, they have failed to understand correctly the qualities of the ignorant who do not appreciate their merits? 25

வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்
காத்தது கொண்டாங் குவப்பெய்தார்—மாத்தகைய
அந்தப் புரத்தது பூஞை புறங்கடைய
கந்துகொல் பூட்கைக் களிறு.

கல்வியறிவொழுக்கங்களால் மிகுந்த சான்ஞேர்கள் அரசவையை இடைவிடாது காத்திருக்க மாட்டார்கள். எனினும் உரிய உயர்வை அடைந்து மகிழ்ந்திருப்பர். அவரல்லாத மற்றையோர் அரசவையை இடைவிடாமற் காத்திருந்தும் அங்கே பெறத்தக்க பயன்களைப் பெற்றும் உள மகிழ்ச்சியை அடைய மாட்டர்கள். அந்தப் புரத்திலே உள்ள பூனை அங்குள்ள உணவுப் பொருள்களை அச்சமின்றிப் பெற்று உண்ணும் மகிழ்வினையுடைய தன்று. கட்டுதறியையும் முறிக்கின்ற போர்க்கோலம் பூண்ட யானை அரண்மனை வாயிலில் நிற்கும் இயல்புடையதாயினும் அன்புடன் உணவு முதலிய பெற்று மகிழும் பெருமையுடையது.

The nobility of the great

The great will not dance attendance at the royal court in expectation of favours, nevertheless they are honoured according to their desert. There are others who wait there for ever and for no benefit. The cat that frequents the splendid apartments of the queens does not enjoy its food without fear, while the valiant elephant kept tied at the palace gates is always attended to timely. 26

குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்—அறவோர்க்
கடிகளே தெய்வம் அனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை.

கற்பரசியாகிய குலமகளுக்கு அவளுடைய கணவனே தெய்வம். மைந்தர்களுக்கு அவர்களது பெற்றோர்களே தெய்வமாவர். அறநெறி நிற்பவர்களுக்கு ஆசிரியரே தெய்வம். எல்லோருக்கும் விரிந்த பசிய ஆபரணங்களை அணிந்த அரசனே தெய்வமாவான்.

### The supremacy of the sovereign

The husband is the god of the chaste wife, born of a good family; the parents are the gods of the children; the Spiritual Preceptor is the god of his disciples; and the sovereign, adorned with leaf-like ornaments of pure gold is the god of all. 27

கண்ணிற் சொலிச்செவியின் நோக்கும் இறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே ஆயினும்—தண்ணளியால்
மன்பதை ஓம்பாதார்க் கென்னும் வயப்படைமற்
றென்பயக்கும் ஆணல் லவர்க்கு.

சொல்ல வேண்டியவற்றைக் கண்ணினுல் சொல்லிப் பார்க்க வேண்டியவற்றைக் காதாற் கேட்டுப் பார்க்கின்ற அரசுரிமையாகிய மேம்பாடு முன்னைப் பிறப்புக்களிற் செய்த நல்வினையின் பாற்பட்டுக் கிடைத்ததாயினும் குளிர்ந்த கருணையால் மக்கள் தொகுதியைப் பாதுகாவாதவர்களுக்கு என்ன பயன் உண்டாகும்? ஆணல்லாத பேடிகளுக்கு வெற்றிக்குரியதாகிய படைக்கலம் என்ன பயனைத் தரவல்லது?

### The proper use of sovereign power

The sovereign prerogative of speaking (commanding) with the eye and seeing with the ear (spies) enjoyed by the prince is the gift of virtues in a former

birth; what will be the use of such a valuable gift, if he does not protect his subjects with tender mercy? Of what avail, are mighty weapons to those who lack manly courage? 28

குடிகொன் றிறைகொள்ளும் கோமகற்குக் கற்றா
மடிகொன்று பால்கொளலும் மாண்பே—குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல.

குடிமக்களை வருத்தி வரியைத் தண்டல் செய்கின்ற மன்னனுக்குக் கன்றை ஈன்ற பசுவினுடைய மடியை அறுத்துப் பாலைக் கொள்ளுதலும் பொருந்தியதாகும். குடிகளைப் பாதுகாத்துக், கொள்ளத் தக்க முறையில் வரியை வாங்கிக் கொள்ளும் மன்னனுக்கு வெள்ளத்தினும் மேம்பட்ட பெருஞ்செல்வம் வந்து பெருகியிருப்பதை நாம் பார்க்கலாம்.

### The levy of revenue

To obtain milk from a new milched cow by cutting open its udder (or by remilking it by force) would seem virtuous, when compared to the act of a king who exacts revenue from his subjects by oppression. Have we not seen the fact that wealth will come in an overflowing flood to those who protect their subjects and get their dues in justice. 29

(To be Continued)

உ

திருச்செந்திலாண்டவன் துணை.

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு

★

**[புதிய மலிவுப் பதிப்பு — 1961]**

புதிய பதிப்பு பிரதி ஒன்றின் விலை ரு. 3–50 ந. பை. ஆகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

( முந்தின பதிப்பு பிரதி ஒன்றின் விலை. ரு. 6/– )

(தபால் கட்டணம் வேறு)

768 பக்கங்கள் கொண்டது. (128 + 621 + 19) உயர்ந்தரக வெள்ளைத்தாளில் பெரிய எழுத்தில் தெளிவாக அச்சிடப் பெற்றது.

டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் எழுதிய குறிப்புரை, ஆராய்ச்சி, முதலியவற்றுடன் கூடியது.

ஒரே சமயத்தில் 5 பிரதிகளும் அதற்குமேலும் வாங்குபவர்களுக்கும் 20% கழிவு உண்டு.

இதன் விற்பனைத் தொகை ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்தைச் சாரும்.

கிடைக்குமிடம்:–

**ஸ்ரீ T. M. குமரகுருபரன் பிள்ளை அவர்கள் B. A., B. L.,**
வழக்கறிஞர்
ஸ்ரீவைகுண்டம் P. O. :: (திருநெல்வேலி மாவட்டம்)

# ஈங்கோய் இலக்கியம்

**திரு. கு. பழநிசாமி அவர்கள் M. A.**
தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கல்லூரி, ஸ்ரீவைகுண்டம்.

இறைவன் நிலை

'இறை'; அப்படி என்றால்தான் என்ன? இறைவனைக் கண்டது யார்? அவ்வாறெனில் அவன் எப்படி இருக்கின்றான்? இவ்வினாக்களுக்கு ஒரோ வழி விடையாகத்தான் இன்றுள்ள உலகத்துச் சமயங்களும் கடவுட் கொள்கைகளும் இருக்கின்றன என்று கூறுதல் மிகையாகாது. ஆனால் இறைவனோ,

"பொங்குபல சமயமெனும் நதிகள் எல்லாம்
புகுந்துகலந் திடநிறைவாய்ப் பொங்கி ஓங்கும்
கங்குகரை காணாத கடலே"

எனும்படி விளங்குகின்றான்.

பலர் பல்வேறு அனுபவத்தில் கடவுளைக் காண்கின்றனர். அவரவர்கள் அனுபவத்திற்கேற்ப கடவுட்காட்சிகளும் மாறுபடுகின்றன. தத்தமக்குற்ற அனுபவ நிலையில் தாம்தாம் புரிந்து கொண்ட நிலையிலேயே ஒவ்வொருவரும் கடவுட் கோலத்தை விளக்குகின்றனர். எனவேதான் கடவுட் காட்சியோ, கடவுளைப் பற்றிச் சொல்லப்படும் பிற கருத்துக்களோ உலக முழுவதும் ஒன்றாக இருக்க முடிவதில்லை. அதிலோர் ஒருமைப்பாடு காணாமையினால்தானோ என்னவோ,

கண்டவர் விண்டதில்லை
விண்டவர் கண்டதில்லை

என்ற கருத்தும் தோன்றியிருக்கின்றது. மாணிக்கவாசகரும் "கேட்டறியோம் உனைக்கண்டறிவாரை" என்றே கூறுகின்றார்.

## வேற்றுமையில் ஒற்றுமை

இவ்விதம் வெவ்வேறுபட்ட அனுபவங்களும் காட்சிகளும் கடவுளைக் குறித்து நிறைந்து கிடைப்பினும் வேற்றுமையிடையே ஒற்றுமையும் இலங்குவது போன்று கடவுளைப் பற்றிய ஒற்றுமைக் காட்சியும் நிலவத்தான் செய்கின்றது.

உலகமெங்கும் இருந்த—இருக்கின்ற மெய்யுணர்வாளர்களின் உணர்வு நிலையும், துரியாதீத அனுபவமும் ஒன்ருகத்தான் இருக்கின்றன. அவர்கள் கடவுள் என்று ஏதோ ஒன்றைக் காட்டுவதைவிட, சுட்டமுடியா ஒன்றைச் சுட்டிக் காட்டி இடர்ப்படுவதைவிட, தாங்கள் அனுபவித்த, உணர்ந்து மகிழ்ந்த "அந்த ஏதோ ஒரு நிலையினையே" காட்சியினையே—செயலினையே, கடவுள் நிலையாகவும், காட்சியாகவும், .செயலாகவும் எளிதாகவும் வெற்றியோடும் கூறிவிடுகின்ருர்கள்.

## உணர்வு நிலைக் காட்சி

இம்மாதிரி உணரப்படும் நிலைகளைத்தான் – உணர்ந்து காணும் காட்சிகளைத்தான் உணர்வுநிலை யனுபவம் (Mystic experience) எனப்பெயரிட்டு அழைக்கின்றனர். அந்த அனுபவக்காட்சிதான்,

"காதல் மடப்பிடியோடும் களிறுவருவன கண்டேன்
கண்டேன் அவர்திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்",

என்று இயற்கைக் காட்சியாய் - அனுபவ உணர்விலிருந்து, கடவுட் காட்சியாய் வெளிப்படுகின்றது.

"காக்கைச் சிறகினிலே நந்தலாலா — உந்தன்
கரியநிறம் தோன்றுதடா நந்தலாலா

என்று இன்னெரு கவிஞர் உணர்வுநிலை அனுபவத்தில் கடவுளின் நிறத்தையே காண்கிருர்.

இவ்வாறு பாடுகின்ற கவிஞர்களைத்தான் உணர்வுநிலைக் கவிஞர்கள் என்ருே, உணர்வுநிலைக் காட்சியாளர்கள் (Mystic Poets) என்ருே அழைக்கின்ருேம். அந்த உணர்வுநிலை அனுபவம் அறிவு நிலைத்தெளிவு போன்று கூறப்படாததாய் உணர்தல் மட்டுமே வல்ல அனுபவநிலையாகவே யிருக்கும்.

இவ்வுணர்வுநிலைப் பாவலர்கள் காக்கைச்சிறகினிலும் களிற்றின் உருவினிலும், பிடியின் நடையினிலும், கல்லிலும் மலையிலும் கானப் பறவை கலகலெனும் ஓசையிலும் கடவுளைக் காண்பதை நம்மால் காணமுடிகின்றது. இவர்கள் பாடலில் காணப்படுவது வெறும் இயற்கையுமல்ல, அல்லது கடவுளை அளந்து, காட்டும் நேர்முக வருணனையுமல்ல. என்றாலும் இறைவனின் பண்பைக் கண்டுதான் பேசுகின்றனர். ஆயின் அங்கே ஒன்றில் ஒன்று மறைந்து விடுகின்றது. கல்லைக் கண்டால் நாயினையும் நாயினைக் கண்டால் கல்லையும் காணமுடியாத ஒருநிலையை - ஒளிப்பாட்டத்தை இவர்கள் பாடல்களில் காண்கின்றோம்.

## தமிழ் நாட்டுக் கவிஞர்கள்

தமிழகத்துச் சமய இலக்கிய உலகில் இத்தகைய உணர்வு நிலை அனுபவக் கவிஞர்கள் மிகுதி என்று கூறுதல் தகும். இறைவனது நிலையை இவ்விதம் உணர்வதிலே - அவ்வாறு உணர்ந்த அந்த அருள் அனுபவத்தைத் தாம் கண்டவாறு கூறுவதிலே - அதைக்கேட்டு மகிழ்வதிலே தனிவிழைவுடையது தமிழ்நாடு.

தென்னாட்டுத் திருமுறைகள் இப்படிப்பட்ட பல இலக்கியங்களைத் தன்னகத்தே கொண்டு மிளிர்கின்றன. பதினோராந் திருமுறையில் உள்ள 'திரு ஈங்கோய்மலை எழுபது' அச்சிறந்தவற்றுள்ஒன்று எனச் சொல்லல் சாலும். சிலர் ஈங்கோய் இலக்கியம் கடவுள் பெயரைத் துணைக்கு அழைத்துக் கொண்டு இயற்கையைச் சுவைபட வருணிக்கும் சிறந்த இலக்கியம் என்று சொல்லுகின்றனர். மற்றும் பலர் எந்நாட்டவர்க்கும் இறைவனைத் தென்னாட்டு ஈங்கோய்மலையில் கண்டு பல்வேறு முறையில் விளக்கித் திளைக்கின்றது இந்நூல் என்று மனம் நெகிழ்ந்து போற்றுகின்றனர். இருவர் கூற்றுக்களும் சரியே!

## நக்கீரதேவ நாயனார்

"ஈங்கோய் மலை எழுபதைப்" பாடிய நக்கீர தேவநாயனார் இரண்டையும் ஒருசேரக் கண்டார். ஒன்றிலே ஒன்று மறைந்து தோன்றும் இன்பத்திலே திளைத்தார், அந்த மெய்யுணர்வாளர்.

அவர் கண்ட இறைவன் ஈங்கோய்மலையின் இயற்கைக் காட்சி களில் கலந்து நிறைந்தார் அவர் கண்ட மலைவளத்தின் ஒவ்வொரு அசைப்பிலும் தென்னாடு உடைய சிவனின் திருக் கோலம் விளங்கியது.

'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பது பேரறி வாளர் துணிபாதலின், தாம் எப்படி எல்லாம் கண்டாரோ–தாம் கண்டது எவ்வண்ணமோ! அவ்வண்ணமே சொல்லுகின்றார். அவரது நெஞ்சத்தின் துடிப்பே ஈங்கோய் மலையின் எழுபது பாடல்களாகவும் மலர்கின்றது.

கையும் காலும் உடையவன் இறைவன் என்று கேள்விப் பட்டிருந்தாலும், கதைகள் பலவற்றுடன் தொடர்புடையவன் இறைவன் என்று அவர் பயின்றிருந்தாலும் அவ்விறைவனை அவர் கண்ட இடம் வேறு— பார்த்த கோலம் வேறு. ஈங்கோய் மலையின் இயற்கை எழிலிலே–அங்கு கேட்கும் குரல்களிலே வேறு பல தோற்றத்திலே இறைவனை அவர் காண்கின்றார். இவைகள் அனைத்தையும் தனித்தனியாகக் காணாமல்,

"பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி"

என்று சொல்வது போல் கண்ணில் காண்பதெல்லாம் அவன் காட்சியாகவே காண்கின்றார்.

ஈங்கோய் இலக்கியம்

இவ்வாறு ஒன்றில் ஒன்று மறைந்து நின்று காட்டும் இன்பக் காட்சியை நூல் முழுதும் பயின்றபின் நம்மால் உணர முடிவது ஒரு உண்மை. கவிஞர் வழி நாமும் நம்வழியில் நமதுணர்வும் செல்லக் கூடுமாயின் அவ்வொற்றுமைக் காட்சி யிலிருந்து பிரிவறியாப் பேரின்ப நுகர்ச்சியும்பெறலாம். அன்றி, அதன் இயற்கை எழில் வருணனையும் பிறவற்றையும் உணர்ந்து இலக்கிய நயத்தையும் மதிப்பிடலாம்.

நாம் சென்று சேர வேண்டிய ஊர் பெரும் புதுமையும் உயர்வும் நிறைந்த ஊராக இருப்பினும் இருமருங்கினும் உள்ள இயற்கைக்காட்சிகளைக் கண்டு செல்லக் கூடாது என்பதோ

காண்பது தவருே அன்று. இவ்வின்பத்தை இழப்பவர் ஏதோ ஒரு வகையில் இன்பத்தை நுகர முடியாதவர் என்றே சொல்லத் தோன்றும்.

ஆனல் இருமருங்கும் உள்ள எழிற்காட்சிகளிலேயே நெஞ்சைப் பறிகொடுத்து அங்கேயே நின்று விடலாகாது. வழிநடை வருத்தந்தீர மனஞ்சோராமல் இருக்க அவைகளைக் கண்டு கொண்டே சென்ருல் நாம் இழப்பது ஒன்றுமில்லை. அதே சமயத்தில் இரு மருங்குக் காட்சிகளையும் நுணித்தறிந்து மகிழ்ந்து செல்லும்போது நமக்குக்குறிக்கோளில்–சேரவேண்டிய இடத்தில் எண்ணமில்லை என்பது பொருள் அல்ல.

ஈங்கோய் இலக்கியம் கடவுள் இலக்கிய மேனும் சமய நூலேனும் அதன் மருங்குகாணும் எழிற் காட்சிகளையும் சற்று இந்நூலகத்துக் காண்போம். அங்கேயும் கடவுள்தோற்றம் தெரிகின்றது. சமயத்தின் பொருள் மணக்கின்றது.

## இயற்கையின் சூழல்

நக்கீரதேவநாயனுர் இயற்கையினையும்,இறைவனையும்ஒன்றில் ஒன்ருகக் கண்டார். பிரிக்கமுடியாதபடி பிணைந்திருப்பதை அவர் உணர்ந்தார். இதனையே ஆசிரியர் அருள் வழி நின்றுணர்ந்த நம்பியாண்டார் நம்பிகளும் சமய இலக்கியத் தொகுப்பாகிய தமது பதனெராந் திருமுறையின் கண் அதைச் சேர்த்து மகிழ்ந்தார். இவ்வீங்கோய்மலையின் எழுபது பாடல்களும் இன்றும் சைவ உலகத்தின் நெஞ்சைக் கவர்ந்து கொண்டுதான் இருக்கின்றன. எனினும் ஏனையோரும் அதன் சுவையுணர, சைவரல்லாதாரும் அதன் இன்பத்தை உணரும் பொருட்டு ஈண்டு அதன் இலக்கியச் சிறப்பினையே சற்று மேம்படக் காண்போம்.

ஈங்கோய் மலைச்சாரலில் ஓரறிவு உயிர்முதல் ஆறறிவுயிரான மனிதர்கள் வரையில் காண்கின்ருேம். அக்கூட்டத்தின் இடையெல்லாம் ஏதோ ஓர் உயிர்ப்பிணைப்பு இழைந்தோடுகின்றது. பல்வேறுபட்ட உயிர் இனங்களும், செடியும், கொடியும் விலங்கும் பறவையும், ஆறும், அருவியும், மலைகளும் நல்கும் காட்சி மெய்மறக்கச் செய்கின்றது. கவிஞர் காணும் வெறும்

மரத்திலும் செடியிலும் இனியதோர் மணம் கமழ்கின்றது. அவர் காணும் கானக் குறத்தியரின் குடிசையிடங்களிலெல்லாம் இன்பத்தின் புதுமலர்ச்சி பளிச்சிடுகிறது. மரஞ்செடி கொடிகளோடு இணையக்காணும் மனிதர்களின் காட்சியிலெல்லாம் ஏதோ ஓர் புன்னகை தவழ்கின்றது. விலங்குகளும் பறவைகளும் எழுப்பும் ஓசை, அருவியின் இன்னிசையோடு கலந்து எதிர் ஒலிக்கின்றது. இங்ஙனம் ஈங்கோய்மலையின் இயற்கைவளம் புன்னகையும் இன்னிசையுமாகப் பொலிவெய்துகின்றது.

இயற்கை தரும் எளிமையான இன்பமும், மனிதனின் அழகுணர்ச்சியை நிறைவு செய்யும் திறனும் கொண்டதாகப் பலபாடல்கள் விளங்குகின்றன. சில தத்துவக் கருத்துக்களின் குரலாகவும் கண்களாகவும் சிலபாடல்கள் விளங்குகின்றன. ஈங்கோய் மலைவளத்தை இத்தனைப் பொருண்மையோடும் கண்ட நக்கிர தேவரின் உணர்ச்சியும் கவிதைக் கண்களும் திறன் வாய்ந்தன என்று பாராட்டுதல் ஒன்றே நம்மால் இயலுவதாம். அவர் கண்வழி புகுந்து கருத்தில் நிலைத்தனவற்றை நாமும் சில தலைப்புக்களில் இனி விளக்கிக் காண்போம்.

---

## நேயர்களுக்கு அறிவிப்பு

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ், மொழியில் துறைத் தலைவர் பேராசிரியர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள், M. A., B. L., M. O. L., எழுதிவரும்

"*சிலப்பதிகார ஓரங்க நாடகத்தின்*"

இரண்டு, மூன்று, நான்காம் காட்சிகள் குமரகுருபரன் அடுத்த பங்குனி இதழ்முதல் தொடர்ந்து வெளிவரும் என்பதை அறிவித்துக் கொள்கிறேன்.

நிர்வாக ஆசிரியர்.

# திரு ஆக்கூர்

பேராசிரியர்,
பாலூர், திரு. கண்ணப்பமுதலியார் அவர்கள்

செந்தமிழ் நாட்டின் ஈடும் எடுப்பும் அற்ற சிறப்புக்கள் பல ஆகும். அவற்றுள் ஒன்று உயர்ந்த கோபுரங்களைக்கொண்ட திருக்கோயில்களைப் பெற்றிருப்பதனுல் என்க. தமிழர்கள் நனி நாகரிகம் படைத்தவர்கள் என்பதற்குக் காரணம் வானளாவிய விமானங்களைக் கொண்ட இறைவன் உறைவிடங்களைப் பெற்றிருப்பதைக் கொண்டு கூறிவிடலாம் என்று மேற்கு நாட்டவர்கள் இங்கு வந்து நம் தமிழ் அகத்தைக் கண்ணுற்ற போது கழறியும் எழுதியும் உள்ளனர்.

திருக்கோயில்கள் அனைத்திற்கும் பொதுச் சிறப்புக்கள் இருப்பினும், நாயன்மார்களாலும், ஆழ்வார்களாலும் பாடப்பட்ட திருத்தலங்கட்குத் தனிச்சிறப்புண்டு. நம்மவர்களில் பலரும் பாடல் பெற்ற தலத்தைப் பெரிதும் அவாவிச் சென்று வணங்கும் வழக்கத்தை இன்றும் காணலாம். அங்ஙனம் பாடல் பெற்ற திருக்கோயில்களில் ஆக்கூர் என்பது ஒன்று.

ஆக்கூர் என்பது இறைவன் உறைவிடம் ஆதலின் திரு என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டுத் திருவாக்கூர் என்று வழங்கப் பட்டு வருகிறது. இத்தலத்தைத் திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் பாடியுள்ளனர். ஆகவே இத் திருக்கோயிலுக்கு இரண்டே பதிகங்கள் உள்ளன என்பதை நாம் அறிதல் வேண்டும். சம்பந்தர், அப்பர் பதிகங்களில் இத்திருக்கோயில் ஆக்கூர் என்று மட்டும் குறிக்கப் பெருமல் முறையே "ஆக்கூரில் தான்தோன்றி மாடமே" என்றும் "ஆக்கூரில் தான் தோன்றி அப்பனுரே" என்றும் குறிக்கப்

பெற்றிருக்கிறது. இதனுல் திருவாக்கூரில் உள்ள தான்-தோன்றி மாடம், தான்தோன்றி அப்பனுர் என்று அத்தொடர்கள் பொருள் படுதலே உணரலாம். இப்பொருளால் திருஆக்கூர் என்பது ஊரின் பெயர் என்பதும், தான்தோன்றி மாடம் என்பது திருக்கோயிலின் பெயர் என்பதும், தான் தோன்றி அப்பனுரே என்பது அக்கோயிலின் இறைவன் திருப்பெயர் என்பதும் புலனுதல் காண்க. இன்றும் இத்திருத்தலத்தின் இறைவர் பெயர் சுயம்புநாதர், சுயம்பு நாதேஸ்வரர் என்று வழங்கப் பட்டுவருதலேக் கேட்கலாம். இங்குள்ள பெருமானுர் மக்களால் நிறுவப் படாதவராய்த் தாமே (சயம்புமூர்த்தியாகத்) தோன்றிய காரணம் பற்றியே தமிழில் தான்தோன்றி அப்பனுர் என்றும், வடமொழியில் சுயம்புநாதர் என்றும் அழைக்கப் படுவாராயினர். இத் தலத்து இறைவியார் திருப்பெயர் வண்டமிழ் மொழியில் வாள் நெடுங்கண்ணி அம்மையார் என்றும் வளமார்ந்த வட மொழியில் கட்கநேத்திரி அம்மையார் என்றும் கூறப்படுகிறது. இத் தலத்துத் தீர்த்தம் குமுதத் தீர்த்தம்.

திருவாக்கூர் சோழ நாட்டைச் சார்ந்த தலம். இது மாயூரம் தரங்கம்பாடி இரயில் பாதையில் ஒரு இரயில் நிலேயமாகவும் அமைந்துள்ளது.அங்கிருந்து முக்கால் கல் நடந்தால் இத் தலத்தை அடையலாம். மாயூரத்தின் கிழக்கு நோக்கிப் பத்தரை கல் சென்ருலும் இதனே அடையலாம்.

திருவாக்கூர்த் தான்தோன்றி மாடம் கோச் செங்கட்சோழ நாயனுரால் கட்டப்பட்ட எழுபது மாடக் கோயில்களில் ஒன்ருகும். இந்நாயனுர் இவ்வாறு இறைவனுக்கு எழுபது மாடக் கோயில்களேக் கட்டினுர் என்பதைத் திருமங்கை ஆழ்வாரும் திருநாறையூர் பற்றிப் பாடிய பெரிய திருமொழியில்,

"இருக்கு இலங்கு திருமொழிவாய்
எண்தோள் ஈசற்கு எழில்மாடம் எழுபதுசெய்து
உலகம் ஆண்ட திருக்குலத்து வளச்சோழன்"

என்று பாடிப் போற்றியுள்ளார். சேக்கிழார் பெருமானும், பெற்றம் உயர்த்தார்க்கு ஆலயங்கள் பெருக அமைத்து மண்ணுண்ட கொற்ற வேந்தர் கோச் செங்கட் சோழர்" என்றும்

"பூதநாதன் தான் மகிழ்ந்து பொருந்தும் பெருந்தண் சிவால யங்கள் காதலொடும் பல எடுக்கும் தொண்டு புரியும் கடன் பூண்டார்"என்றும் நாயனரது கோயில் திருப்பணியினை விதந்து போற்றியுள்ளனர்.

மாடக்கோயில் என்பது யானை ஏற முடியாதபடி படிக் கட்டுக்கள் அமையக் கட்டப்பட்ட கோயில் ஆகும்.

திருவாக்கூர் ஆலயத்தில் ஆயிரத்தில் ஒருவர் என்ற பெயரில் ஒரு விக்கிரகம் உளது. இப்பெயருடன் இறைவர் திரு மேனி தாங்கி இருப்பது பற்றி ஒரு வரலாறும் கூறப்படுகிறது. அதாவது ஓர் அரசன், இறைவன் கட்டளைப்படி ஆயிரம் பிராம் மணர்கட்குச் சமாராதனை நடத்தியபோது தான்தோன்றி அப்பரும் கலந்து கொண்டதாகவும், அதன் பின்பு அரசனுக்கு வெளிப்பட்டதாகவும் சொல்லப்படுவது.

திருஆக்கூர் திருத்தலம் சிறப்புலிநாயனர் பிறந்தருளிய தலம். இந்நாயனர் வேதியர் மரபினர்; இறைவரது ஐந் தெழுத்தை ஓதியும் வேள்விகள் செய்தும் இறைவரது திருவரு ளைப் பெற்றவர். இவர் பிறந்த வீதி இன்றும் சிறப்புலி நாயனர் தெரு என்ற பெயரால் இருந்து வருகிறது. இத் தலத்தில் இந்திரன் இறைவரைப் பூசித்துப் பேறு பெற் றுள்ளான்.

சிறப்புலி நாயனர் ஐந்தெழுத்து ஓதி, வேள்விகள் பல செய்த திருத்தொண்டுகளுடன் நிற்றலின்றி அடியார்கட்கு உணவு அளித்துப் பொருள் அளித்தும் வந்தனர். இதனைச் சேக்கிழார்.

ஆளும் அங்கணருக் கன்பர் அணைந்தபோ தடியில் தாழ்ந்து
மூளும் ஆதரவு பொங்க முன்புநின் றினிய கூறி
நாளும்நல் அமுதம் ஊட்டி நயந்தன எல்லாம் நல்கு
நீளும்இன் பத்துள் தங்கி நிதிமழை மாரி போன்ருர்.

என்று எடுத்து மொழிந்தார். இந்தப் பண்பையே சுந்தரமூர்த்தி சுவாமிகளும் "சீர்கொண்ட புகழ் வள்ளல் சிறப்புலி" என்று

சிறப்பித்துப் புகழ்ந்துள்ளார். இக்கருத்தினைச் சேக்கிழாரும் "ஈகைத் திறத்தினில் சிறந்த நீரார்" என்று, இயம்பியுள்ளார்.

திருஆக்கூர் பற்றி ஆறு கல் வெட்டுக்கள் உள்ளன. இவற்றுள் இரண்டு கல்வெட்டுக்கள் திருமால் கோயிலைப் பற்றியன. ஏனைய நான்கு கல்வெட்டுக்களால் சில அரிய குறிப்புக்கள் தெரிய வருகின்றன.

திருஆக்கூர்த் தலப்பெருமானுர் தான்தோன்றி மாடமுடையார் என்பதும், இவ்வூர், இராசேந்திரசோழ சதுர்வேதி மங்கலத்திற்கு உட்பட்டிருந்தது என்பதும், இவ்வூர் அலுவல்களைப் பெருங்குடி மக்கள் நடத்தி வந்தனர் என்பதும், இப்பெருங்குடி மக்கள் கூட்டப் பெருமக்கள், என்று கூறிக்கப்பட்டனர் என்பதும், ஒரு கல் வெட்டால் அறிய வருகின்றன.

திருஆக்கூர்த் தான்தோன்றி மாடத்தில் வைகாசி மாதத்தில் திருவிழா நடந்து வந்தது. விழா முடிவில் இறைவர் தீர்த்த மாடக் காவிரிக்குச் செல்வர் இவ்வாறு, இறைவர் ஆற்றிற்குச் செல்ல வசதியாகப் பெருவழி (High ways) யினை கும்ப ஞாயிறு முதல் ஊர்க்காரியங்களைக் கவனிக்கும் கூட்டப் பெருமக்கள் ஏற்பாடு செய்தனர். இச்செய்திகளையும் ஒருகல்வெட்டால் அறியலாம்.

அழகிய பல்லவர் வீரப்பிரதாபர் ஹொய்சளர்களைச் சிறை செய்தும், பாண்டியர்களை அடக்கிக் கப்பம் வாங்கியும், சோழ நாட்டின் பாடல் பெற்ற திருத்தலங்களை வணங்கியும், தாம் வணங்கிய திருத்தளிகட்கு இறையிலி (வரியில்லா) நிலங்களைத் தானமாக ஈந்தும், பழுதுற்ற திருக்கோயில்களைப் பழுது பார்த்தும் வந்தார். இவர் திருஆக்கூர் முதலான ஊர் மக்கள் மிக்க வரி காரணமாகப் பயிரிடாமல் இருந்ததையும் வெளி ஏறி விட்டதையும் அறிந்து, அக்குடிமக்களை அழைத்து வரிகளைக் குறைத்து, நிலங்களை உழுமாறு செய்து உதவிகள் பல புரிந்தனர். இச்செய்திகளையும் கல்வெட்டு ஒன்றால் உணர்ந்து கொள்ளலாம்.

ஆளுடைய பிள்ளையாம் சீர்காழிச் செம்மல் திருஆக்கூரைப் பற்றிப்பாடும் போது, அவ்வூரின் இயற்கை எழிலை இனிது எடுத்து இயம்பியுள்ளார்.

கூர்ஆரல் வாய்நிறையைக் கொண்டு அயலே கோட்டகத்தில்
தாரா மல்கு ஆக்கூர்.

என்றும்,

"தேன்மருவு பங்கயத்துச் செங்கழுநீர் பைங்குவளை
தாம்மருவும் ஆக்கூர்"

என்றும் பாடி இருப்பதைக் காண்க. திருஆக்கூரில் வாழும் மக்களின் அருஞ் செயல்களைப் பற்றிச் சிரபுரக்கோனார் செப்பியுள்ளனவற்றையும் நாம் அறிதல் இன்றியமையாதது.

பொய்யிலா மெய்ந்நெறிக்கே தக்கிருந்தார்

அங்கம்ஆ றோடும் அருமறைகள் ஐவேள்வி தங்கினார்

"ஆம்பல் அம்பூப் பொய்கைபுடை தாக்கினார்"

"நான்மறை யோடு ஆறங்கப் பலகலைகள் தாங்கினார்."

"பொன்அடிக்கே நாள்தோறும் பூவோடு நீர்சுமக்கும்
தன் அடியார்"

என்றும் பாடி இருப்பதைக் காண்க.

இத்தலத்துப் பெருமக்களைப் பற்றி நாம் மேற்கண்டவாறு அறிந்து கொள்வதோடு அன்றி இவற்றிற்கும் மேலாகத் தோணிபுரத்தோன்றலார் அவர்கள் இவ்வூர் மக்களின் கொடைச் சிறப்பின் மாண்பினை

"வேளாளர் என்றவர்கள் வள்ளன்மையால் மிக்கிருக்கும்
தாளாளர் ஆக்கூர்"

என்று அவ்வூரார் வள்ளன்மையை உளமாரப் புகழ்ந்துள்ளார். இக்கருத்தைமேலும் வற்புறுத்தும் முறையில் புகலிவேந்தர்,

"இன்மையால் சென்றிரந்தார்க் கில்லை என்னு தீந்துவக்கும்
தன்மையார் ஆக்கூர்"

என்றும் புகழ்ந்துள்ளார். இக்கருத்து நந்தம் திருவள்ளுவப் பெருந்தகையார் குறட்பாவாகிய

'இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையர்ன் கண்ணே உள'

என்பதைத் தழுவிய தன்றோ!

தொண்டர் சீர் பரவுவார் இக்கருத்துக்களை உளம் கொண்டே,

பொன்னிநீர் நாட்டின் நீடும் பொற்பதி புவனத் துள்ளோர்
இன்மையால் இரந்து சென்றோர்க் கில்லைஎன் னாதேஈயும்
தன்மையார் என்று நன்மை சார்ந்தவே தியரைச் சண்பை
மன்னனார் அருளிச் செய்த மறைத்திரு ஆக்கூர் அவ்வூர்.

என்று பாடியுள்ளார்.

இவ்வூர் மாடங்களின் சிறப்பை "விண்ணொளிசேர் மாமதியம் தீண்டியக்கால் வெண்மாடம் தண்ணொளிசேர் ஆக்கூர்" என்பர் சம்பந்தர்.

திருஆக்கூர்த் தான்தோன்றி மாடம் தொல்கோயில். பூங்கோயில் என்று பாலருவாயர் பதிகம் பகர்வதையும் உணர்தல் வேண்டும். இவற்றால் அக்கோயிலின் பழமையும் அழகும் புலனாதல் காண்க.

திருநாவுக்கரசர் தமது பதிகத்தில் திருவாக்கூரைப் பற்றித் தனித்தமுறையில் எந்தவிதமான சிறப்பும் கூறாது அத்தலத்து இறைவர் பெயரை மட்டும் ஒவ்வொரு பாடலிலும் அமைத்துப் பாடிச் சென்றார்.

குன்றை ஆளியார் திருவாக்கூரைச் சிறப்பிக்கும் போது, "ஆலை சூழ்பூகவேலி அத்திரு ஆக்கூர்" என்றும் "அறத்தினில் மிக்கமேன்மை அந்தணர் ஆக்கூர்" என்றும் கூறியதோடன்றி

தூமலர்ச்சோலை தோறும் சுடர்தோடும் மாடம்தோறும்
மாமழை முழக்கம் தாழ மறைஒலி முழக்கம் ஓங்கும்
பூமலி மறுகில் இட்ட புகைஅகில் தூபம்தாழ
ஓமநல் வேள்விச் சாலை ஆகுதித் தூபம் ஓங்கும்

என்றும் புகழ்ந்து பாடியுள்ளனர்.

மகா மகோபாத்யாய டாக்டர். உ. வே. சாமிநாதையர் அவர்களின்

## நினைவு நாள் வாழ்த்து

டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையத்தின் நூலகர்

E. S. வரதராஜய்யர் அவர்கள் B. A.,

பாடியது.

பொன்னூர் தமிழ்க்குப் புரிந்துபல சேவைகளைப்
பன்னாள் உழைத்துப் பலபனுவல் — நன்முறையில்
தந்தனனால் உத்தமதா னத்தான் பலர்புகழும்
அந்தணன் சாமிநா தன். 1

பெற்றால் மகவு சரஸ்வதிபோற் பெற்றுப் பேணுகநூல்
கற்றாலச் சேயொப்பக் கற்றே யுயர்க கடிதுழைக்கப்
பெற்றால் அவன்போல் உழைத்துப் பிறங்குக பேசிடிலிப்
பொற்று ரணியில் உயர்சாமி நாதனைப் போரிலையே. 2

தவம்தவம் செய்துவை தேசியைப் பெற்றதென் னூர்புலவர்
நவக்கலைத் தெய்வம் தனதுபேர் பூண்டதோர் தையல்மனம்
உவப்பப் பெறும்பிள்ளை உத்தம தானத்தன் ஒண்கலையில்
நிவப்புற்று நின்றது மோர் வியப்போ சொன்மின் நேயர்களே. 3

நாளும் பரமன் தனை நினைந் தேத்தி நயந்துகையில்
தாளும் எழுதும் தனிக்கோலும் கொண்டுநானுவிதமேற்
கோளுடன் சான்றோர் கருத்துணர்ந் தேயுரை கூறிநின்றே
நீளும் புகழ்கொண் டுயர்சாமி நாதநின் னேரெவரே. 4

நல்லா சிரியனை நண்ணிப்பன் னூல்கள் நவையறக்கற்
றல்லாருங் கண்டன் அடிபேணி நூலின் அரும்பொருளைப்
பல்லார்க் குரைத்துப் பலநூல்க ளச்சிற் பதித்துயர்ந்தான்
வல்லா னுயர்சாமி நாத னவனை வழுத்துவமே. 5

அந்நாள் கடல்கடைந் தேதிரு மாலமு தம்மளித்தான்
இந்நாள் பனுவற் கடல்கடைந் தேபொருள் இன்னமுதை
நன்னுவலர்க் களித்தே மகிழ்ந்தான் சாமி நாத னென்பான்
மன்னு வுலகினில் மன்னினன் வண்சீர் மருவிநின்றே. 6

இயற்றமிழும் இசைத்தமிழு மினிதுகற்றுப் பேராசான் எனத்திகழ்ந்தாய்
மயக்கமறக் கேட்டுணர்ந்தாய் பன்னூல்கள் அச்சேற்றி வழங்கிநின்றாய்
நயப்புடனால் உரைவகுத்தும் உரைநடைகள் பலவரைந்தும் நயமைசான்றாய்
வியத்தகுநின் னுழைப்பென்னே உயர் சாமி நாத னெனும் விபுதரேறே. 7

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 9670 to 72 | Tiruvembavai and Tiruppavai | By Thiruvachakamani, The Trustee of Sri Kapaleeswarar Devesthanam [Mylapore |
| 9673 | கொற்றவன்குடி உமாபதிதேவ நாயனர் அருளிச் செய்த சித்தாந்த நூல்கள் (உரைநடையுடன்) | தருமபுர ஆதீனம் |
| 9674 to 77 | மெய்கண்டார் சித்தாந்தம் | திருவாவடுதுறை ஆதீனம் |
| 9678 | சைவதூஷண பரிகாரம் | யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் |
| 9679 | கல்வெட்டுத் துணைவன் (வினவிடை) | திரு. கே.எம். வேங்கடராமையா எம்.ஏ. பி.ஓ.எல், பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி. திருப்பனந் [தாள். |
| 9680 | திருவாதவூரடிகள் புராணம் (உரையுடன்) | ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் |
| 9681 | அரிச்சந்திர புராணம் | சு. அ. இராமசாமிப் புலவர், கழக வெளியீடு. |
| 9682 to 85 | திருப்பைஞ்ஞீலித்தல வரலாறும் தேவாரமும் | திருப்பைஞ்ஞீலி 5வது கூட்டு வழிபாட்டின் இலவச வெளியீடு. |
| 9686 | திருஓணகாந்தன்தளித் திருப்பதிகம் | தருமபுர ஆதீனம் |
| 9687 | திருக்கச்சி அனேகதங்காவதம் திருப்பதிகம் | ஷை |
| 9688 | திருவெண்பாக்கத் திருப்பதிகம் | ஷை |
| 9689 | திருவன்பார்த்தான் பனங்காட்டூர்த் திருப்பதிகம் | ஷை |

(தொடரும்)

திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# 'திருமுறை வெளியீடுகள்'

| | | ரூ. ந. பை |
|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும் புதிய பதிப்பு) ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் .. .. ... | 2 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் .. ... | 1 30 |
| 7* | திருவாசகம் ,, ... | 0 56 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) ... | 0 56 |
| 10* | திருமந்திரம் .. (புதிய பதிப்பு) ... | 2 25 |
| 11* | பதினோராந்திருமுறை .. ,, ... | 1 50 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) (அச்சில்) | |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) ... | 3 00 |
| 17 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) ... | 1 75 |
| 18 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் .. ... | 2 75 |
| 19 | .. யுத்த தேவகாண்டம் .. ... | 2 00 |
| 20 | .. தக்ஷகாண்டம் .. ... | 1 50 |
| 21 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் ... | 0 25 |
| 22 | கந்தரனுபூதி ... | 0 13 |
| 23 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் ... | 0 37 |
| 24 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் ... | 0 06 |
| 25 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் ... | 0 37 |
| 26 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 50 |
| 27 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 06 |
| 28 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் ... | 1 50 |
| 29 | திருக்குறள் – பொருட்பால் .. ... | 2 50 |
| 30 | திருக்குறள் – காமத்துப்பால் ... | 1 00 |
| | ௸ 28 29. 30 திருக்குறள் 3 புத்தகமும் ... | 4 00 |
| 31 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் ... | 0 75 |
| 32 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 13 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485 57.

Regd No. M. 5574 

| | | | |
|---|---|---|---|
| 33 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 75 |
| 34 | திருவுசாத்தானக் கல்வெழுத்துக்கள் | ... | 0 37 |
| 35 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை - மதுரை மீனுட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 36 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | .. | 1 25 |
| 37 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை - தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 38 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... | 1 00 |
| 39 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 75 |
| 40 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... | 0 50 |
| 41 | பெரியபுராணம் – உரைநடை | ... | 2 00 |
| 42 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... | 2 25 |
| 43 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங் களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 44 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 45 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 46 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 47 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்ப | ... | 1 37 |
| 48 | ௸ ௸ பொருட்பால் 2-ம் பதிப்பு | ... | 2 75 |
| 49 | ௸ ௸ காமத்துப்பால் ௸ | ... | 1 20 |
| 50 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... | 0 50 |
| 51 | மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... | 0 50 |
| 52 | கந்தரநுபூதி-தெளிவுரையுடன் | ... | 0 35 |
| 53 | திருவாரூர்-திருப்பதுவல்கள் | .. | 0 10 |
| 54 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | ... | 0 10 |
| 55 | பழமொழித்திருமுறை | ... | 0 25 |
| 56 | திருவாரூர் நான்மணிமாலை | ... | 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
"தியாகராஜ விலாசம்" 53, பின்னைவார் கோவில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- • இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 47, 48, 49) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் - '63.